# இலக்கண விதிமூலங்களும் விதிகளும்

பண்டிதர் க. வீரகத்தி
சிறப்பாய்வாளர்,
தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்
79, பிரகாசம் சாலை (பிராட்வே), சென்னை-108.
1984

க. வீரகத்தி



**கிளைகள் :**

திருநெல்வேலி-6 . மதுரை-1 கோயமுத்தூர்-1
கும்பகோணம்-1 திருச்சிராப்பள்ளி-2

**கழக வெளியீடு:** களசுO

*முதற்பதிப்பு : செப்டம்பர் 1984*



ILAKKANA
VITHI MOOLANGALUM VITHIKALUM

அப்பர் அச்சகம், சென்னை-108. (I/1)

## பதிப்புரை

அறிஞர் திரு. வீரகத்தி அவர்கள் தமிழ் நாட்டுக்கும், கழகத்திற்கும் புதியவரல்லர். முன்னரே அறிவுலகொடு நன்கு தொடர்புடையவர். 1968இல் கழகம் நடத்திய திருவள்ளுவர் திருநாள் விழாப் போட்டியிற் கலந்துகொண்டு, எழுதிய 'பரி உரையில் இலக்கணக் குறிப்புக்கள்' பற்றிய ஆய்வுக் கட்டுரைக்குப் பரிசு பெற்றது நாடறிந்த செய்தி.

திரு. க. வீ. எதை நோக்கினும் அதற்குப் புதுமையும் செழுமையும் ஊட்டுபவர். அவர்கள் நூலை வெளியிடுவதில் கழகம் மகிழ்ச்சியடைவது வியப்புக்குரியதாகாது. அறிவுலகம் எமது முயற்சியை வரவேற்கும் என்பதில் ஐயப்பாடில்லை.

இக் கட்டுரைகளில் 'தொல்காப்பியமும் நிகழ்கால இடைநிலையும்' என்பது 'இலக்கண விதிமூலங்களும் விதிகளும்' என்ற தலைப்பில் வெளிவந்தது. அதுவே பொருத்தம் நோக்கி நூற்பெயராகத் தரப்பட்டுள்ளது.

இந்நூல் கழகவழி வெளிவர இசைந்த ஆசிரியர் அவர்கட்குக் கழகத்தின் நன்றி என்றும் உரியதாகும்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

## என்னுரை

இந்த நூலில் அடங்கிய ஆய்வுக் கட்டுரைகள் எல்லாமே ஒரு தாய் பிள்ளைகள் அல்ல; நெருக்கமான இரத்த உறவு உடையனவும் அல்ல. அதே நேரம் தூரத்துச் சொந்தம் இல்லாமலும் இல்லை.

இலக்கண உலகில் 'புத்தம் புதிய பார்வை' வேண்டும். இது என் வேட்கை. அதனால் அவ்வப்பொழுது சிந்திக்கிறேன். என் சிந்தனை வடிவம் பெற்றவற்றில் இவை சில வாகும்.

இவற்றை நூலுருவாக அறிஞர்கள் ஆய்வாளர்கள் முன் வைப்பதில் ஒருவித திருப்தி ஏற்படுகிறது. என் முயற்சிகளின் தாக்க வீக்கங்களைச் சுய பரிசோதனைக்குட்படுத்தலாம் என்பதால்.

நூலுருவான திருப்தியை எனக்களித்த சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்துக்கு, சிறப்பாகக் கழக ஆட்சியாளர் உயர் திரு. இரா. முத்துக்குமாரசுவாமிப் பிள்ளை எம். ஏ., பி. லிப். அவர்களுக்கு என் நன்றியுரியதெனச் சொல்லித் தெரிய வேண்டியதில்லை. கிருதயுகப் பண்பினராய அவர்கள் 'சால்பு' அளிக்கும் மதிப்பு கலியுகம் கடந்தும் நிலை கொள்ளப் போவதாகும்.

வணக்கம்.

''வாணி''
கரவெட்டி
ஈழம் 4-8-84

க. வீரகத்தி

## கட்டுரைகள்

# இலக்கண விதிமூலங்களும் விதிகளும்

## 1. வீரசோழியம்

**ஓர் அறிமுகம்**

தொல்காப்பியம் எழுந்து ஏறத்தாழ ஓராயிரம் ஆண்டுகளுக்குப் பின்னர் - கி. பி. 11இல் எழுந்தது வீரசோழியம். நூலாசிரியர் புத்த மித்திரனார். ''பொன்பற்றி மன்புத்த மித்திரனே'' என்ற பாயிரச் செய்யுட் பகுதியால் இவர் பொன்பற்றி ஊரினர் என்பதும், பொன் பற்றி காவலர் என்பதும் ''ஆயுங்குணத்து அவலோகிதன் பக்கல் அகத்தியன் கேட்டு, ஏயும் புவனிக்கு இயம்பிய தண்டமிழ்'' என்ப தால் புத்தமதம் சார்ந்தவர் என்பதும் அறிய முடிகின்றது. புத்த மித்திரனார் என்ற பெயரோ/புனைபெயரோ இம் முடிவை அழுத்தி நிற்கின்றது. வீரசோழியத்தை முதன்முதலாகப் பதிப்பித்த சி. வை, தா. அவர்கள் சமணமதத்தைச் சார்ந்தவர் எனக் குறிப்பிடுவர். கலைக்களஞ்சியம் ஓரிடத்தில் பௌத்தர் எனவும் (தொகுதி 7. பக். 427), பிறிதோரிடத்தில் இந்நூலாசிரியரும் உரையாசிரியரும் சமணர்களே (தொகுதி 9. பக். 449) எனவும் குறிப்பிடுகின்றது. ஆயினும் சமணர் என்ற கருத்து எடுபடவில்லை.

கி. பி. 1063—1070 காலப்பகுதியைச் சார்ந்தவன் வீர ராசேந்திர சோழன். தமிழில் அடங்காத ஆர்வமும் பற்றும் கொண் டவன். தமிழ் என்றாலே வீரராசேந்திர சோழன் எனக்கருதும் அளவுக்கு அவன் தமிழார்வமும் அறிவும் தமிழ்ப்பணிக்குத் தன்னை ஆளாக்கியவனாயும் இருத்தல் வேண்டும். இன்னும், வீரசோழிய ஆசிரியர் அவன் மேற்கொண்ட நல்லுறவு காரணமாகத் தாம்

எழுதிய இலக்கண நூலுக்கு வீர சோழியம் எனப் பெயரிட்டுக் கொண்டார் போலும்! அல்லது இந்நூலின் தன்மையை நோக்க, தமிழியலியம் எனப் பெயர் வைத்திருக்கலாம்போல் பொருத்தமாகத் தோற்றுகிறது.

(அ) எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி ஆகிய ஐந்திலக்கணங்களுக்கும் தனித்தனி அதிகாரங்களாக இலக்கணம் இயம்பிய முதற்பெருமை வீரசோழிய ஆசிரியருக்கே உரியது. தொல்காப்பியத்துக்குப்பின் வீரசோழியத்துக்குமுன் வேறுசில இலக்கண நூல்கள் இருந்திருக்கலாம். ஆனால் தொல்காப்பியத்துக்குப்பின் நமது கைக்கெட்டிய நூல் வீரசோழியம் ஒன்றேயாகும். அதனால் தொல்காப்பியத்துக்குப் பின்பு மொழிவளர்ச்சியிலும் தேக்கத்திலும் மொழி என்னும் வற்றாநதிப் படுகைகளில் ஏற்பட்ட மாற்றங்களை நாம் அறிந்திட உறுதுணையாய் இருப்பது வீரசோழியம் ஒன்றுமே!

(ஆ) தம்காலப் பேச்சுத் தமிழின் மூச்சு வீரசோழிய ஆசிரியரில் ஏற்படுத்திய தாக்கம்போல் வேறெந்த இலக்கணநூல் ஆசிரியரையாவது பாதித்துள்ளது எனச் சொல்வதற்கில்லை. பேச்சுத் தமிழின் பொதுமை ஓட்டங்களைத் தெரிந்துகொண்ட புத்தமித்திரனார் அவற்றைத் தம்நூலில் அப்படியே கையாளத் தவறவுமில்லை. சான்றாக, நிகட்சி (66) தமிட்சொல் (7), புகட்சி (149), பனமூன்று (17), பன்னொன்று (24), கிடப்பின்களாம் (18), பொச்சம் (54) ஆதியானவற்றைக் குறிப்பிடலாம். பேச்சுத்தமிழை அப்படியே எழுத்துத்தமிழுக்குக் கொண்டுவந்த முதற்பெருமையும் வீரசோழிய ஆசிரியருக்கு அளிக்கப்படவேண்டியதே. இந்த நோக்கில் புதுமையான சில புணர்ச்சி விதிகளைக் கூற அவர் தயங்கவுமில்லை.

(இ) தொல்காப்பியனார் தனித்தனியான சொல் உறுப்புகள் (அகப்பாட்டுறுப்புகள்) பற்றிச் சிலசில மூலங்களைத் தெரிவித்தாரேயன்றி, சொல்லுறுப்பியல்/பதவியல் என ஒன்று கண்டாரில்லை. சொற்புணர்ச்சிகளுக்கிடையில் மெய்பிறிதாதல், தோன்றல், குன்றல் என்ற விகாரங்கள் ஏற்படலாம் எனக் குறிப்பிட்டார் தொல்காப்பியனார். வீரசோழியமோ இம்மூன்று விகாரங்களும் சொற்களுக்கிடையிலும் ஏற்படும். ''ஒரே மொழிக்கண்ணும் உலகிற்கு ஒப்பின் மும்மை விகாரம் தந்து எய்திடும்'' எனக் குறிப்பிட்டது மட்டுமன்று, தாது



காலஇடைநிலை, விகுதி என்பவற்றை எடுத்தோதிய முதற்பெருமையையும் வீரசோழியம் தனதாக்கிக் கொண்டது. வீரசோழிய ஆசிரியர் தாதுப்படலம் கிரியா பாதப்படலங்களில் குறிப்பிட்டவற்றைத்தான் நன்னூலார் தூய்மைசெய்து செம்மைப்படுத்தி, தமிழ்மயப்படுத்தி பதவியல் என ஓரியல் கண்டார். இம் முயற்சி குறிப்பாக அடிச்சொல் பற்றிய முயற்சி, சுன்னாகம் குமாரசுவாமிப் புலவரால் வினைப்பகுபத விளக்கம் என்ற ஆய்வுநூல் மூலம் முழுமைத்துவம் பெற்றுள்ளதை இங்குக் குறிப்பிடுவதில் தவறொன்றுமில்லை.

(ஈ) ஆசிரியர் காலத்தில் வடமொழி மதமொழியாக பாரதம் முழுவதும் பரவி நின்றது. தமிழ்நாடு இதற்கு விலக்காக வில்லை. ''மதத்தில் பொலியும் வடசொல்'' (83) என வீரசோழியம் குறிப்பிட்டதிலிருந்து வடமொழிச் செல்வாக்கின் பாதிப்பை நாம் அறிந்துகொள்ளலாம். தமிழ் அறிஞர்கள் வடமொழியையும் படிக்க வேண்டியிருந்தது. எனவே தமிழ்மரபையும் வடமொழி மரபையும் பக்கம் பக்கமாக வைத்து, முதன்முதலாக ஒப்பியல் நோக்கில் ஒரு தமிழிலக்கணம் எழுதிய முதற்பெருமைக்கும் புத்தமித்திரனாரே உரியவராகி விட்டார். அன்றி, இவ் இருமொழி இலக்கணங்களையும் ஒன்றிணைக்கும் முயற்சியில் மித்திரனார் ஒரு பொழுதும் முற்றாக ஈடுபட வில்லை. இலக்கணக் கோட்பாடுகள்பற்றிச் சில முரண்பாடுகள் உண்டு. (அவை தனியாக ஆராயப்படும்) ''வடநூல் மரபும் புகன்று கொண்டே'' (பாயிரம்) என்ற பூர்வ பீடிகையுடன் தொடங்குவதை உளங்கொளல் வேண்டும்.

(உ) இத்துணை முதற்பெருமைகளைத் தேடிக்கொண்டது வீரசோழியம். இலக்கணக் கோட்பாடுகளின் வளர்ச்சியை அறிந்துகொள்வதற்கு இது போன்ற இலக்கணநூல் வேறேதும் இல்லை எனக் கருதலாம். இதனாற்போலும் வரலாற்றுப் பேராசிரியரான நீலகண்ட சாஸ்திரிகள், 'தமிழ் இலக்கணக் கொள்கையின் வரலாற்றைப்பற்றி அறிந்துகொள்ளும் மாணவனுக்கு ஆர்வத்தை உண்டாக்கும் வகையில் இந்நூல் அமைந்துள்ளது' எனத் தாம் எழுதிய தென்இந்திய வரலாற்றில் குறிப்பிட்டுள்ளார். வரலாற்றுப் பேராசிரியர் ஒருவர் புரிந்துகொண்ட உண்மை நமது மூத்த தலைமுறை மொழியியல் அறிஞர்கள் சிலருக்குப் பிடிபடவில்லை. உள்வீதியைச் சுற்றிவந்துவிட்டு சாமி

யைத் தொட்டுக் கும்பிட்டுக்கொண்டு வந்திருக்கிறேன் எனக் கூறு வதுபோல் அமைந்துள்ளது இவர்கள் சிந்தனைகள்.

நன்னூலார் வழிநின்று வீரசோழியம் ஒரு சார்புநூல் எனக் குறிப்பிடுவர் அதனை முதன்முதலாக அச்சில் தந்த சி. வை. தா. அவர்கள். சூத்திரம், ஓத்து, பிண்டம் என்ற அடிப்படையில் இலக் கண நூல்களைச் சிறு நூல், இடைநூல், பெருநூல் எனத் தொல் காப்பியப் பாயிர விருத்தியில் சிவஞான முனிவர் குறிப்பிட்ட பிரிவு களில், வீரசோழியத்தை ஒரு பெருநூல் எனக் குறிப்பிடலாம். இன்னும் பொருத்தமாகக் குறிப்பிடுவதானால் வீரசோழியம் பின் எழுந்த இலக்கண நூல்களுக்கெல்லாம் ஒரு முன்னோடி நூல் என்றே இனங்காண வேண்டும்.

பின்வந்த இலக்கண நூல்களில் நன்னூல் இலக்கண விளக்கம் ஒருவகையின. பிரயோக விவேகம், இலக்கணக் கொத்து பிறிதொரு வகையின. தொன்னூல் விளக்கம் மற்றொரு வகையது. மூவகைப் படும் இந்நூல்களுக்கெல்லாம் வீரசோழியம் ஒரு முன்னோடி நூல் எனக் குறிப்பிடுவதே சாலப் பொருத்தமாகும்.

(2)

இனி, வீரசோழியம்பற்றிய அதிக அளவு, தவறான மதிப்பீடு களைக் கவனிப்போம். மொழித்தூய்மை வாதம் தூய்மைவாதிகளை விரும்பச் செய்யும், முழுக்க முழுக்க வீரசோழிய உரையாசிரியரை நம்பிய தன்மை அதாவது மூலநூற்பாக்களை நேரடியாக அணுகாமல் விட்டமை போன்ற காரணிகள் தவறான மதிப்பீட்டுக்குரிய அடிப் படைகள் ஆகலாம். முதலில் அறிஞர் சிலரால் தெரிவிக்கப்பட்ட கருத்துகளைத் தொகுத்துப் பார்க்கலாம்.

(அ) வடமொழியைப் பின்பற்றித் தமிழ் வினைச்சொற்களுக்குப் பகுதிகளைப் புதியனவாகப் படைத்துக்கொள்க என வீர சோழிய ஆசிரியர் கூறியுள்ளார்.

(ஆ) வடமொழி இலக்கணம் தமிழுக்கும் பொருந்தும் என்று கூறி வடமொழிக் குறியீடுகளையே வீரசோழியம் அமைத்துக்கொண்டது.



(இ) பழந்தமிழ் இலக்கண மரபைப் புறக்கணித்து வடமொழி இலக்கணக் கொள்கைகளைத் தமிழ்மொழியில் புகுத்தி யுள்ளமை.

இம் மதிப்பீடுகள் பற்றித் தனித்தனியாகச் சிந்திப்போம்.

முதற் பிரிவுக் கருத்தை (அ) அதன்முதலாக வெளியிட்டவர் டாக்டர் மு. வரதராசனார். அவர் தமது மொழிநூலில் சொல்வது:

...இவ்வுண்மை உணராத வீரசோழிய ஆசிரியர் வட மொழியைப் பின்பற்றித் தமிழ் வினைச்சொற்களுக்குப் பகுதி களைப் புதியனவாகப் படைத்துக் கூறலானார். அடிக் குறிப்பாக, தமிழ்ச் சொல்லுக்கெல்லாம் வடநூலே தாயாகி நிகழ்கின்றமை யின், அங்குள்ள வழக்கெல்லாம் தமிழுக்கும் பெறும் என்ற வீரசோழிய உரையாசிரியரின் கருத்தையும் கொடுக்கத் தவற வில்லை. இதே கருத்தைத் தமிழ் வரலாற்று இலக்கணத்தில் அதன் ஆசிரியராகிய கலாநிதி ஆ. வேலுப்பிள்ளை அவர்களும் ஒப்புக்கொண்டுள்ளார்கள். மு. வ. அவர்கள் அடிக்குறிப்பாகக் குறிப்பிட்டதை வேலுப்பிள்ளை நூலுக்குள்ளேயே சேர்த்துக் கொண்டதுதான் உள்ள வேறுபாடு. (தமிழ் வரலாற்று இலக் கணம் 1966 பக். 98) அடிச்சொல் பற்றியது தவிர, வேலுப் பிள்ளை வரலாற்றிலக்கணத்தில் பிறிதோரிடத்தில் (1966 பக். 102) வடமொழி மரபைப் பின்பற்றுவதாக மற்றொரு செய் தியையும் குறிப்பிட்டுள்ளார். வீரசோழிய ஆசிரியர் இடை நிலையையும் விகுதியையும் பிரித்துக் கூறாமல், பல இடங்களிலும் சேர்த்தே கூறுகின்றார். சங்கத மொழியிலுள்ள தி, கி, மி. என்பன காலமும் இடமும் உணர்த்துவதால், தமிழிலும் ஈறுகள் காலமும் இடமும் உணர்த்தவேண்டும் என்று கருதியிருக்கிறார் போலத் தெரிகிறது.

நல்லது. முதலில் அடிச்சொல்பற்றிய மதிப்பீடுகளைக் கவனிப் போம். அடிச்சொல் பற்றி வீரசோழியம் குறிப்பிடும் நூற்பா பின் வருமாறு உள்ளது:

*மன்னியசீர் வடநூலில் சரபச என்றுவந்து*
*துன்னிய தாதுக்களின் போலிபோலத் தொகுதமிழ்க்கும்*

பன்னிய தாதுக்களைப் படைத்துக்கொள்க; முன்னிலையில்
உன்னிய ஏவல் ஒருமைச்சொல்போன்று உலகிற்கொக்கவே.
(நூற்பா. 60)

மேற்படி நூற்பாவில் 'படைத்துக்கொள்க' என்று கூறினர் அல்லாமல் புதியனவாகப் படைத்துக்கொள்க என ஆசிரியர் கூற வில்லை. 'புதியனவாக' என மு. வ. கற்பனை செய்துகொண்டார். படைத்தல் பல பொருள் ஒருசொல். சோற்றை ஆக்குதல் வேறு, சோற்றைப் படைத்தல் வேறு. இங்கு வீரசோழியம் குறிப்பிடும் 'படைத்தல்' சோற்றைப் படைத்தல் போன்றது. பாவனைக்குத் தக்க தாகச் செய்தல் என்பது கருத்து. 'படைத்துக்கொள்ளே', 'இயற்றிக் கொள்ளே' எனக் கையாளுதலே ஆசிரியரின் நூற்பா நடை எனத் தெரிகிறது. அன்றி, இல்லாததை உண்டாக்க முடியாது என்ற உண்மை தெரியாதவர் அல்லர் புத்தமித்திரனர். சர, பச என இரு மாதிரிகளை இன்னொரு மொழியில் இருந்து தருவதில் என்ன தவறு இருக்கிறது? மற்றது, உரையாளரின் கருத்து ஒரு பொழுதும் நூலாசிரியரைக் கட்டுப்படுத்தமுடியாது. பெருந்தேவனர் அப்படி எழுதியதற்கு, புத்தமித்திரனர் எந்த வகையிலும் பொறுப்பாளர் அல்லர்.

வரலாற்று இலக்கண ஆசிரியர் குறிப்பிடும் இடைநிலையையும் விகுதியையும் பிரித்துக் கூருமல் இணைத்துக் கூறுவதுபற்றிய கருத்தும் சரியற்றதாகவே தெரிகிறது. வீரசோழிய ஆசிரியர் பகுதி, விகுதி, இடைநிலைகளைக் குறிப்பிடும் வகையில் இரு அடிப்படை களைக் கையாண்டுள்ளார். ஒன்று. ஒரு சொல்லில் அடிச் சொல்லை ஒரு பகுதியாகவும் அடிச் சொல் தவிர்ந்த இடைநிலை விகுதிகள் அனைத்தையும் மறுபகுதியாகவும் குறிப்பிடுவது. மற்றது, கால இடைநிலைகளையும் விகுதிகளையும் பிரிதது்ப் பிரித்துக் குறிப்பிட் டுள்ளது. முதற் பிரிப்பு விளக்கவியல் பொறியியலாளர் கருத்துக்கும் ஏற்றதாக உள்ளது. (அடிச்சொல் + அடிச்சொல் அல்லாதன). இவற்றிைற்போலும் 1728இல் வெளியிட்ட கொடுந்தமிழ் இலக் கணத்திலும், 1730இல் வெளியிட்ட செந்தமிழ் இலக்கணத்திலும் வீரசோழிய ஆசிரியர் பிரித்தவாறே வீரமாமுனிவரும் கால இடை நிலைகளையும் விகுதிகளையும் சேர்த்து ஒன்ருகப் பிரித்துள்ளார்.



ஆகவே வடமொழி/சங்கதத்தைப் பின்பற்றித்தான் வீரசோழிய ஆசிரியர் அடிச்சொற்கள்பற்றியும் கால இடைநிலைகள் பற்றியும் குறிப்பிட்டார் என்பது எவ்வகையிலும் பொருத்தமாக இல்லை.

அடுத்து 'ஆ' பிரிவு பற்றிய குறிப்புகளைப் பார்ப்போம். இக் கருத்தை வெளியிட்டவர் வையாபுரிப்பிள்ளை அவர்கள். (இலக்கணச் சிந்தனைகள் 1956. பக். 125) வையாபுரியார் கருத்தில் ஓரளவு உண்மை உண்டு. அது இலக்கணக் குறியீடுகள்பற்றியது. அதுவும் முழுக்க முழுக்க வீரசோழிய ஆசிரியரைச் சார்ந்தது ஆகாது. வீர சோழிய உரையாளரும் அதிகமான அளவுக்கு வடமொழிக் குறியீடு களைப் புகுத்தியுள்ளார். சான்ருக 'கிரியாபதப் படலம்' என்றதையே குறிப்பிடலாம். வீரசோழிய ஆசிரியர் இப் படல முதல் நூற்பாவில் 'தொழிற்பதம்' என்றே குறிப்பிடுகின்ருர் அல்லாமல் கிரியாபதம் எனக் குறிப்பிடவில்லை. எனவே வீரசோழிய இலக்கணக் குறியீடுகள் பற்றிய விரிவான ஆய்வு அவசியமாகும். புதிய புதிய சிந்தனைகளை உள்வாங்கும் பொழுது புதிய புதிய குறியீடுகளும் தேவையாகின்றன. இதனலே மொழி வளர்ச்சி அன்றி வீழ்ச்சியடைவதில்லை. வேண்டு மென்ருல் குறியீடுகளை மாற்றிக்கொள்ளலாம். பின்வந்தோர் மாற்றிக் கொண்டனர். இதற்காக வீரசோழிய ஆசிரியர் நமது மொழிக்கு ஆற்றிய பெரும் பணியை இழந்துவிடமுடியாது.

இறுதியாக மூன்ருவது (இ) பிரிவு பற்றிய கருத்தை அதிகமாக நிராகரித்துவிடலாம். இலக்கணக் கோட்பாடுகள்பற்றிய சில தவறுகள் உண்டுதான். அவை தனித்தனியாக ஆராயப்படும். அது வடமொழி இலக்கணத்தையும் தமிழ்மொழி இலக்கணத்தையும் ஒன்றிணைக்கச் செய்த முயற்சி எனப்படுவது. வடசொற் கிடப்பு, (83) அறிந்து எழுதவேண்டும் என்பவரா ஒன்றிணைக்க முற்படுவர்? 'தப்பா வடவெழுத்தைத் தவிர்ந்து' (142) என்று செய்யுள் செய்ய வேண்டும் என்றவரா வடமொழியை விரும்புபவர்?

தெற்றி வழக்கொடு தேர்ந்துணர்வார்க்கு
இன்பம் செய்யல் இன்றி
பற்றி வடநூலெழுத்துக்களோடு பயின்று
உரையில்

மற்றிவையில்லென்று வாங்கவும் பட்டுப்
பொருண் மருண்டிப்
பெற்றி யுடைச் சொல் பழித்த
உறுப்பென்று பேசுவரே. (143)

இப்படி நூற்பா செய்பவரா தமிழை வடமொழிக்கு நீர் வார்த்துக் கொடுப்பவர்? புத்தமித்திரனாரின் தமிழ்ப்பற்று எங்களுடைய தமிழ்ப்பற்றைப் பார்க்க விஞ்சிநிற்பதைக் காணலாம். கால தேச வர்த்தமானத்துக்கு உட்பட்டுத்தான் வீரசோழிய ஆசிரியரும் சிந்தனைகளைப் பகிர்ந்தளிக்கமுடியும்.

(3)

தொல்காப்பியர் போலல்லாது வீரசோழிய ஆசிரியர் தமது இலக்கண நூலைக் கட்டளைக் கலித்துறை யாப்பு அமைப்பில் எழுதியுள்ளார். கட்டளைக் கலித்துறைக்குக் காரிகை என்றும் பெயர் உண்டு. காரிகை பெண் என்ற பொருளையும் தரும். பெண்களை விளித்துச் சொல்வதாகவே நூற்பாக்கள் அமைந்துள்ளன. கட்டளைக் கலித்துறை யாப்பில் அதிகம் செய்திகளைச் செறிக்க முடிகின்றது. இன்னுமொரு காரணம் குறிப்பிடலாம். காரைக்காலம்மையார், ஆண்டாள் இவர்களுக்குப் பிற்பாடு பெண்கள் கல்வித்துறையில் அதிகம் ஈடுபட்டதாகத் தெரியவில்லை. மீண்டும் பெண்களைத் தமிழ்த் துறையில் ஈடுபடுத்தவேண்டும் என்ற சமூக நோக்கு பெண்களை விளித்து இலக்கணச் செய்திகளை வெளியிட்டமைக்குக் காரணமும் ஆகலாம்.

எந்த வகையில் பார்த்தாலும் சரி, வீரசோழியத்தைப் புறக்கணித்து, தமிழ் மொழி வரலாற்றைப் புரிந்துகொள்வது தோல்வியில் முடிவதாக முடியும். இன்று உள்ள நிலையில் வீரசோழியம்பற்றிய மீளாய்வு மிக மிக அவசியமானதாகும்.

# 2. எழுத்துப் பேறும் உடன்படு(த்து) மெய்யும்

## எழுத்துப் பேறு :

தனி மொழிகளிலும் தொடர்மொழிகளிலும் முறையே முதன்மையான சொல்லுறுப்புகளையும், நிலைமொழி, வருமொழிகளையும் தவிர, குறிப்பிட்ட சில எழுத்துகள் மொழிக்கிடையிலும், நிலைமொழி வருமொழிகளுக்கிடையிலும் தோன்றுகின்றன. நிலைமொழி வருமொழிகளுக்கிடையில் தோன்றும் எழுத்து தோன்றல் விகாரம் எனப்படும். தொல்காப்பியனார் இவ்வகைத் தோற்றத்தை மிகுதல் என்பர். வருமொழி நிலைமொழிகளுக்கிடையில் 'மிகுதல்' பெறும் எழுத்தை எழுத்துப்பேறு எனக் குறிப்பிடுவர் நச்சினார்க்கினியர். (தொல் : 112)

மொழிகளுக்கிடையில் தோன்றும் எழுத்துகள் தவிர கெடுதல் (குன்றல்), திரிதல் (மெய் பிறிதாதல்) விகாரங்களையும் தொல்காப்பியனார் குறிப்பிட, இம் மூன்று விகாரங்களும் தனிமொழிக்கண்ணும் நிகழும் என முதன் முதலாகக் குறிப்பிட்டது வீரசோழியம்.
(காரிகை : 9)

இருவர் தரவுகளிலிருந்து மொழிக்கிடையிலோ அல்லது நிலைமொழி வழிமொழிகளுக்கிடையிலோ ஏதோ ஒரு காரணத்துக்காகத் தோன்றும் எழுத்துகளை எழுத்துப்பேறு எனப் பிறிதொரு வாய்பாட்டினாற் குறிப்பிடலாம். எழுத்துப்பேறு என்பதற்குரிய பரந்த பொருள்நிலை இதுவாகும். ஆனாலும், ஒலிநயம் அல்லது பொருள் வேறுபாடு தரும் சாரியைகளையும், வேற்றுமை அல்வழிப் பொருளில் வரும் சந்தி எழுத்துகளையும், உயிரிறுதி உயிர்முதல் மொழிகளுக்கிடையில் ஆகும் விட்டிசையைத் தடுக்கவரும் உடன்படு மெய்களையும் சொல்லாக்க உருபன்களையும் தவிர்த்து, எஞ்சிநிற்கும் தோன்றல்

விகாரமாகவுள்ள எழுத்தொலியையே எழுத்துப்பேறு எனக் குறிப்பிடுதல் இலக்கண உரையாளர் மரபாகிவிட்டது. மரபு எதுவானாலும் அதன் பரந்த பொருள்நிலையிலேதான் எழுத்துப்பேறு இங்கே கையாளப்படுகின்றது.

(2)

## எழுத்துப் பேறுக்கான தேவைப்பாடுகள்:

**(அ) சீர்தளைச் சிதைவுகளைத் தடுக்க வருவன :**

பாடல்களில் சீரமைப்புகள் சிதையும் பொழுது குறிப்பிட்ட சில எழுத்துகளைப் பெற்று சீரமைப்பு நிறைவுற்றுப் பாடல்களின் யாப்பமைதியைச் சரிசெய்து விடுகின்றன.

சான்று :

(1) "மன்னர் குலத்து மரபோகாண்? அண்ணன்பால்
என்னிலைமை கூறிடுவாய், ஏகுகநீ என்றிட்டாள்"
(பாஞ்சாலி சபதம்-67)

ஏகுகநீ - குகரம் - எழுத்துப்பேறு.

(2) "சென்றீ பெருமநிற் றகைக்குநர் யாரோ" (அகம்: 46)

சென்றீ (செல்+ற்+ஈ) றகர மெய்யும் ஈயும் எழுத்துப்பேறு 1

(3) "அட்டி லோலை தொட்டனை நின்மே" (நற். 300) 1

(4) "நினவ கூறுவல் எனவ கேண்மதி" (புறம். 35)

நின்மே (நில்+ம்+ஏ) மகர மெய்யும் ஏகாரமும் எழுத்துப்பேறு.

மேலே காட்டிய சான்றுகளில் 'ஏகுநீ' என்றிருந்தால் வெண்தளை தவறிவிடுகின்றது. செல், நில், நின என இருந்தால் ஓரசைச் சீர்களாகிவிடும். குறிப்பிட்ட எழுத்துப் பேறுகள் இவற்றைச் சரி செய்துவிடுகின்றன. அநேகமாகச் செய்யுட்களில் வரும் சீர் சிதைவுகளைத் தடுத்து நிற்கும் அளபெடைகளை இவ்வகைப் படுத்தலாம்.



**ஆ) அல்வழி வேற்றுமைப் பொருள் வேறுபாடு:**

சான்று :

(1) இராக்காக்கை (இரவில் காக்கை)—வேற்றுமைத் தொடர்
இரா அக்காக்கை(இராத காக்கை)—அல்வழித் தொடர்

அகரம் எழுத்துப்பேறு என இலக்கண உரையாளர்கள் கூறுவர். இதனை எழுத்துப் பேறு எனக் கொள்வதிலும் பார்க்க தகர எழுத்துப் பேறு பெற்றுக்கொள்ளாத எதிர்மறைப் பெயரெச்ச அமைப்பு எனக் கொள்ளலாம். (இரா+த்+அ=இராத)

(2) தின்னுகுதிரைகள் —வினைமுற்றுத்தொடர்= குதிரைகள் தின்னு

தின்னுக்குதிரைகள்—எதிர்மறைப் பெயரெச்சத்தொடர்

**இ) ஒலிநய எழுத்துப் பேறுகள் :**

சான்று :

(1) பொன்விளையும் பூமி—பொன்னு விளையும் பூமி ;
உகரம் ஒலிநய எ. பேறு

| | | | | |
|---|---|---|---|---|
| கண்துரை | —கண்ணுத்துரை | ,, | ,, | ,, |
| மண் | —மண்ணு | ,, | ,, | ,, |
| பொன் | —பொன்னு | ,, | ,, | ,, |

(2) அரா அப்பாம்பு —அகரம் எழுத்துப்பேறு
பலா அக்கோடு — ,, ,,

இவற்றை எழுத்துப்பேறு அளபெடை எனக் குறிப்பிடுவர் இலக்கணக்கொத்தாசிரியர். 3

(ஈ) சொல்லாக்க எழுத்துப் பேறுகள் :

சான்று :

தலை + ய் + அன் = தலையன் ய் எழுத்துப்பேறு
தலை + வ் + அன் = தலைவன் —வ் ,,
கலை + ஞ் + அன் = கலைஞன் —ஞ் ,,
இயக்கு + ந் + அர் = இயக்குநர் —ந் ,,

இவற்றைப் பெயரிடை நிலைகள் என இக்கால இலக்கணங்கள் கூறும்.

(உ) விட்டிசையை நிரவ வருவன :

உயிரிறுதி நிலைமொழியும் உயிர்முதல் வருமொழியும் சேரும்பொழுது உயிரோடு உயிர்க்கு மயக்கம் இன்மையின் விட்டிசை ஏற்படுகின்றது. அதாவது நிலைமொழியும் வருமொழியுமான தொடர் ஒரு சொல் நீர்மைத்தாக இல்லை. இந்த வகையில் ஏற்படும். விட்டிசையைத் தடுப்பதற்கு மூன்று விதமான தீர்வுகள் கையாளப் பட்டுள்ளன.

(1) வட + அது = வடாஅது (புறம் 6)
குண + அது = குணாஅது ( ,, )
குட + அது = குடாஅது ( ,, )
அது + அன்று = அதான்று (அதுவல்லாமலும்)
நன். 180.

மேல்தரப்பட்ட முதல் மூன்று சான்றுகளிலும் நிலைமொழி இறுதி உயிர் இரண்டாவது உயிர் ஆக்கப்பட்டுள்ளது. ஆக்கப்பட்டாலும் உடன்படு மெய்கள் பெறவில்லை. ஆயினும் விட்டிசை தடுக்கப் பட்டுள்ளது. இறுதி உதாரணத்திலும் உடன்படுமெய் இல்லை. உடன்படுமெய் சேர்ந்திருந்தால் எழுவாய்த் தொடராகிவிடும். மடாதிபதி, படாதிபதி போன்ற ஒரு சேர்க்கையாக இதனைக் கொள்ளலாம்.



(2) நிலைமொழி இறுதிகள் குற்றுகரங்களாயின் அவற்றை நீக்கிவிட்டு உயிர் முதலான் நிலைமொழிகளைச் சேர்ப்பது இரண்டாவது தீர்வாகும். முற்றியலுகரச் சொற்கள் சிலவும் இம் முறைக்குள்ளாக்கப் பட்டுள்ளன.

காற்று > காற்ற் + அடித்தது = காற்றடித்தது
கட்டு > கட்ட் + அவிழ்ந்தது = கட்டவிழ்ந்தது
கதவு > கதவ் + உடைந்தது = கதவுடைந்தது

(3) இரண்டு உயிர்களுக்குமிடையில் இரு உயிர்களுக்கும் இசைவான அரை உயிர்கள் எனக் கருதப்படும் யகர வகர மெய்களை உடன்படு மெய்களாக இடையில் கொடுத்து நிலைமொழி, வருமொழிகளைச் சேர்த்துக்கொள்வது.

கரை + ஊர் = கரையூர்
நிலா + அழகு = நிலாவழகு

மேலே தரப்பட்ட சான்றுகளிலிருந்து சந்தி எழுத்துகளும் அளபெடையிற் சிலவும் ஒலிநயச்சாரியை எழுத்துகளும் உடன்படு மெய்களும், பெயரிடை நிலைகளும் எழுத்துப்பேறென உரையாளரால் குறிக்கப்படுவனவும் முடிவில் தோன்றல் விகாரங்களான எழுத்துப்பேறுகளே எனக் கொள்ள முடியும்.

(3)

## உடன்படு மெய் :

எழுத்துப் பேறுகளில் ஒருவகையினவாகக் காட்டப்பட்டுள்ள யகர வகர உடன்படுமெய்கள்பற்றி விரிவாக ஆய்வது அவசியமாகும்.

(1) முதன் முதலாக உடன்படு மெய்கள்பற்றிக் குறிப்பிட்டவர் தொல்காப்பியனாரே. ''எல்லா மொழிக்கும் உயிர்வரு வழியே உடம்படு மெய்யின் உருவுகொளல் வரையார்'' (தொல் : 140) உடன்படுமெய் கொள்ளுதலை நீக்கார் என்பதிலிருந்து தொல்காப்பியர் காலத்துக் கட்டாயமாக உடன்படுமெய் கொண்டு முடிதல் வேண்டு

மென்ற வரையறையுமிருக்கவில்லை என்பது புலனாகின்றது. உரையாசிரியர்கள் இதனைச் சுட்டிக்காட்டத் தவறவுமில்லை.

(2) உயிரிறுதி நிலைமொழி உயிர்முதல் வருமொழிகளுக்கிடையில் உடன்படுமெய்கள் கொள்ளப்படலாம் என்ற தொல்காப்பியனார் உடன்படுத்தும் மெய்களாக இன்ன, இன்னமெய்கள் வருமெனக் கூறவில்லை. ஏறத்தாழ ஓராயிரம் ஆண்டுகளுக்குப்பின் எழுந்த வீரசோழியமே முதன்முதலாக உடன்படுமெய்களாக யகர வகர மெய்களைக் குறிப்பிட்டது. (காரிகை 13)

(3) யகரமும் வகரமும் மயங்காத உயிரொலிகளை உடன்படுத்தும் மெய்களாக வருவதற்கான காரணங்களை மொழியியலாளரும் வியக்கும்படியாகக் குறிப்பிட்ட பெருமை மாதவச் சிவஞான முனிவருக்கே உரியது.

''உடம்படு மெய்யின் உருபுகொளல் வரையார் என ஆசிரியர் பொதுப்பட ஓதினாரேனும், உயிர்களை உடம்படுத்தற் குரியன இடப்பிறவியால் அவ்வுயிரோடு ஒத்த இடை எழுத்து என்பதூஉம், அவற்றுள்ளும் மொழி முதற்கண் வருவதற் குரியன யகர வகரங்களே ஆகலின் அவையே ஈண்டைக்கு வரப்பெறும் என்பதூஉம் தாமே விளங்கும். அவற்றுள்ளும், பெரும்பாலும் இ, ஈ, ஏ, ஐ முன்னர் யகரமும், ஏனை உயிர்களின் முன்னர் வகரமும் வரும் என்பது ஏற்புழிக்கோடலாற் பெறப்படும் ''உடம்படு மெய்யே யகார வகாரம் உயிர் முதல் வருஉங் காலை யான'' என்ப ஆகலின் அங்ஙனம் வரும் யகர வகரங்களே உடம்படு மெய் எனப் பெயர் பெறும் என்க'' 4.

மொழிப்புணர்ச்சியில் தன்னோடு தான் மயங்காத உயிர்களை உடன்படுத்துவதற்கான தன்மை கொண்டவை யகர வகரங்கள் என்பதற்கு முனிவர் இரு காரணங்கள் காட்டியுள்ளார். ஒன்று அவ்வுயிரோடு ஒத்த இடை எழுத்து என்பதாகும். மொழி நூலாரும் யகர வகரங்களை Semi-Vewels எனக் குறிப்பிடுவர். மற்றது, மொழி முதற்கண் வருவன யகர லகரங்கள் என்ற காரணமாகும். முனிவரின் அதி நுட்பமான இக் கருத்து உடன்படுமெய் பற்றிய விளக்கத் தவறுகளை இலகுவாக நீக்கிவிடும். மொழிப்



புணர்ச்சியில் உடன்படுமெய்களாக யகரமும் வகரமும்தான் வருமென்ற முடிபு, தனிச் சொற்களுக்கிடையே வரும் இரண்டு உயிர்களுக்கிடையில், வேறு மெய் எழுத்துகள் வரா என்ற கருத்தை உட்கொண்டதாகாது.

(4) 'உடன்படுமெய்' என்ற இலக்கணக் கலைச்சொல் அல்லது குறியீடு உடம்படு மெய் என எழுதப்பட்டதாற்போலும் கால்டுவெல்லும் அவரை வரிக்குவரி பின்பற்றுபவர்களும் குழப்பம் கொண்டனர். தொல்காப்பியர் கால மொழிவழக்கை நோக்கும் பொழுது, நூற்பா பின்வருமாறுதான் அமைந்திருத்தல் வேண்டும்.

''எல்லா மொழிக்கும் உயிர்வரு வழியே
உடன்படு மெய்யின் உருபுகொளல் வரையார்.''

உடன்பாடு என்ற சொல் உடம்பாடு எனப் பிற்காலத்தவரால் திரித்து எழுதப்பட்டிருத்தல் வேண்டும். மிகப் பழைய சங்க நூல்கள் எனக் கூறப்படுபவற்றில் 'உடம்பாடு' என்ற சொல் கையாளப்பட்டதாகத் தெரியவில்லை (?). இவ்விடத்து சங்கரநமச்சிவாயர் எழுதிய குறிப்பொன்றை நினைவுகூர்வது பொருத்தமானதாகும்.

''உடன்படல் என்பது உடம்படல் என மரீஇயிற்று. 'உடம்பாடிலாதவர் வாழ்க்கை' என வருதல் காண்க. (குறள் 890) உயிரோடு உயிர்க்கு மயக்கம் இன்மையின் வரும் உயிர்க்கு உடம்பாக அடுக்கும் மெய் உடம்படுமெய் எனப் பொருள் கூறுதலும் ஒன்று'' (நன். 162)

மருவிய நிலைக்கு, தொல்காப்பியத்திலும் மிகப் பிற்பட்டதான திருக்குறள் உதாரணம் காட்டப்பட்டது நமது நினைவிற்கு உரியதாதல் வேண்டும்.

உடம்பாக அடுக்கும் மெய் என இன்னொரு பொருள் கண்டு கொண்டது உடம்படுமெய் என்ற வழக்கு ஏற்பட்டதனால் உண்டான தொல்லையாகும். மெய் என்றாலே உடம்பு. உடம்பாக அடுக்கும் உடம்பு எனச் சொல்வது வேடிக்கை இல்லையா? இன்னும் மெய் எழுத்துக்கு 'உடம்பு' என்னும் சொல்லை மாற்றுச்சொல்லாகத் தொல்காப்பியர் எங்கும் கையாளவில்லை. மெய் எழுத்திற்கு உடல்,

உடம்பு என்ற குறியீடுகளைக் கையாண்டுகொண்டவர்கள் முறையே வீரசோழிய ஆசிரியரும் நன்னூல் ஆசிரியருமாவர்.

ஒட்டு மொத்தப் பார்வையில் தொல்காப்பிய நூற்பா உடன்படு மெய் என்றே இருத்தல் வேண்டும். அவை யகர வகரங்கள் என்பதும் ஏற்கெனவே தெளிவாக்கப்பட்டுள்ளது. குறிப்பிட்ட நிலைமொழி வருமொழிகளுக்கிடையில் ஏற்படும் விட்டிசையைத் தடுப்பதே இவற்றின் செயற்பாடு ஆகும். யகர வகர மெய்களை முழுமையான தோன்றல் விகாரம் என இலக்கண உரையாளர்கள் கொள்ளாத தன்மையையும் கவனித்தல் வேண்டும். 'இதனை இயல்பு புணர்ச்சி என்பாரும் உளர்.' என மயிலைநாதர் கூறுவர். (நன். 161) சங்கரநமச்சிவாயரும் இக் கருத்தை ஒத்துக்கொள்வது அறிய வேண்டியதாகும். (நன். 162)

இதுவரை யகர வகர மெய்களே உடன்படுமெய்கள் என்பதும், உடன்படுமெய் என்னும் குறியீட்டை உடம்படுமெய் என வழங்கி வருவது சரியற்றதென்பதும் விளக்கப்பட்டுள்ளது. மேலும், உயிர் இறுதி நிலைமொழி உயிர்முதல் வருமொழிகளுக்கிடையில் யகர, வகரம் தவிர வேறு எந்த மெய் எழுத்தும் வரவில்லை என்பதையும் பொதுமைப்படுத்திவிடுவோம்.

(4)

## கால்டுவெல் கருத்து:

கால்டுவெல் உடன்படுமெய் பற்றி அதிகம் சிந்தித்ததாகத் தெரிய வில்லை. உடம்படுமெய் பற்றி ஒப்பியல் முறையில் அதிகம் ஆய்வு செய்துள்ளார். 5. வீரசோழியம் ஏற்பட்ட பின்பு ஒவ்வொரு சொல்லின் அகப்பாட்டு உறுப்புகளையும் வரையறை செய்து அவற்றைச் சேர்த்து முழுமையான சொல்லாகக் காணும் முயற்சியும் தொடங்கிவிட்டது. அதனைப்போலும் தொடர்மொழிப் புணர்ச்சிக் கான உடன்படுமெய்களுடன் சொற்களுக்கிடையில் இரண்டு உயிரொலிகளுக்கிடையில் வரும் மெய் எழுத்துகளையும் 'உடன்படு மெய்கள்' எனக் கருதிக்கொண்டார்.

வந்தன, சென்றன முதலான சொற்களில் வரும் அன்சாரியை யைப் பிரித்து னகர மெய்யையும் உடம்படுமெய்யெனக் கொண்டார்.



இந்த னகரம் 'அன்' சாரியையிலுள்ள மெய்யேயாகும்; உடம்படுமெய் அன்று என டாக்டர் மு. வ. மறுத்துள்ளது மிகப் பொருத்தமே. இவ்வாறே மகரம் வகரத்தின் திரிபு என்பதும் அவர்களால் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது.

இவ்வாறு வருவனவற்றை எல்லாம் சொல்லாக்கத்தில் ஏற்படும் எழுத்துப்பேறுகள் எனக் குறிப்பிடுவதுதான் பொருத்த மாகும்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கட+அம் | = | கடகம் | — | க் | : எழுத்துப்பேறு |
| இறை+அன் | = | இறைவன் | — | வ் | : ,, |
| புலை+அன் | = | புலையன் | — | ய் | : ,, |
| இயக்கு+அர் | = | இயக்குநர் | — | ந் | : ,, |
| படி+அம் | = | படினம் | — | ன் | : ,, |
| செய்+ஆ+த்+ஏ | = | செய்யாதே | — | த் | : ,, |
| தா+உ | = | தரு | — | ர் | : ,, |

அன்றி, இவற்றை எல்லாம் உடம்படுமெய்கள் என்பதா? இரண்டு உயிர் ஒலிகளுக்கிடையில் வரும் மெய் எழுத்துகளைப் பொதுமைப்படுத்தினால் யகர வகரங்களே நிலைமொழி வருமொழி களுக்கிடையிலும், தனிச் சொற்களுக்கிடையிலும் வருவனவாகும்; இவையே உடன்படுமெய்களும் ஆகும். வேண்டுமென்றால் இனி ஒரு விதி செய்வோம்; யகர வகரம் தவிர தனிச் சொல்லின் இரண்டு உயிர் ஒலிகளுக்கிடையில் வரும் மெய் எழுத்துகளை 'உடம்படு ஒலிகள்' என்போம்.

1. பாரதியார், பாஞ்சாலி சபதம் வானவில் பிரசுரம் 1980 பக். 443.
2. பார்க்க: நன்னூல் சங்கர நமச்சிவாயர் உரை 336.
3. இலக்கணக் கொத்து (90)
4. தொல்காப்பிய முதற் சூத்திர விருத்தி. நாவலர் பதிப்பு 1952 பக். 45, 46.
5. Caldwell, Comparative Grammar of the Dravidian Languages; 1961; Page; 177.
6. மொழிநூல் 1955; பக். 35.

# 3. மூலபாடத் திறனாய்வில் தொல்காப்பியத்து இரு நூற்பாக்கள்

**(அ) கள் விகுதியும் தொல்காப்பியமும் :**

வரலாற்று முறையிலான மொழியியல் வளர்ச்சியில் தொல்காப்பிய விதிகளை நோக்கும்பொழுது சிலபல ஐயப்பாடுகளும் முரண்பாடுகளும் எழுகின்றன. இவற்றுக்குத் தீர்வு காணும் நோக்கில் தொல்காப்பிய விதிகளின் மூலபாடத் திறனாய்வு அத்தியாவசியமாகிறது. இந்த வகையில், கள் விகுதி பற்றிய நூற்பாவும் (654), சொல்லதிகாரப் புறனடை நூற்பாவும் (946) இங்கே ஆய்வுக்கிடமாகியுள்ளன.

1-1. இன்றைய நடைமுறைத் தமிழில் கள் விகுதியைப் பயன்படுத்துவது மிகுதியாக வளர்ந்து விட்டது. இவ்வகைப் பன்முகப் பயன்பாடுகள் பலவற்றை கி. பி. 2ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது எனப் பலராலும் கருதப்படும் சிலப்பதிகாரத்திலும் காணலாம். கள் விகுதியைப் பயன்படுத்தும் நிலைபற்றிச் சங்கர நமச்சிவாயர் குறிப்பிடுவதுபோல் (நன். 278) அஃது உயர் திணையில் தனிப்பன்மை விகுதியாகவும், பகுதிப்பொருள் விகுதி யாகவும், விகுதிமேல் விகுதியாகவும், பின்னிணைந்து சிலப்பதிகார காலத்திலேயே நன்கு வேரூன்றிக் கொண்டது. சான்றுகள் :

| | | | |
|---|---|---|---|
| அ. | தனிப்பன்மை விகுதி | மாக்கள் | (மொத்தம் 5 இடம்) |
| | | அந்தரசாரிகள் | (10:13, 27:93) |
| ஆ. | பகுதிப்பொருள் விகுதி | யாங்கள் | (11:161) |
| இ. | விகுதிமேல் விகுதி | பெண்டிர்கள், சிறுமியர்கள் | (19:4, 17:68) |
| | | வானோர்கள், தேவர்கள் | (24:118, 9:12) |
| | | காண்பார்கள் (வி. அ. பெ.) | (1:53) |
| | | உண்ணுமின்கள் (வினைமுற்று) | (16: இறுதிவெண்பா) |

இவைதவிர, உயர்வுப் பொருளில் கள் விகுதி ஒருமை கருது வதையும் கவனிக்கலாம். ''அடிகள் முன்னர் யானடி வீழ்ந்தேன்'' (13 : 87) இங்கே, அடி என்னும் அஃறிணை இயற் பெயருடன், பன்மை தெரிக்கும் கள் விகுதி பின்னிணைந்து, அடிகள் என்னும் உயர்திணைப் பெயர் ஆக்கம் பெற்றுள்ளது. பொதுவாக இவ்வகைப் பிணைப்பில் பலவின் பெயர்கள் ஆக்கமுறுவதே மரபு. மாறாக, உயர் திணைப் பெயர் ஆக்கப்பட்டுள்ளது. அதுவும் ஒருமையைக் காட்டுவ தாகும். விந்தையான இம்மொழி ஆக்கத்திலிருந்து, கள் விகுதி அஃறிணைப் பன்மையை உணர்த்து முன், உயர் பன்மையை உணர்த் தும் வழக்குப் பெற்றிருத்தல் வேண்டும் எனக் கருதுவது சரியற்றதா காது. உயர்திணையில் மாத்திரம் எண் வேறுபாடு சிறப்புவிகுதி களால் தொடர்ச்சியாக உணர்த்தப்படுகிறது எனவும், பழந்தமிழில் அஃறிணையைப் பொறுத்தவரையில் இப்படி ஒரு நிலைமை இல்லை யெனவும் திரு. யூல்ஸ் புளொக் கருதுவது[1] இவ்விடத்தில் கருதக் கூடியதாக உள்ளது.

அஃறிணையைப் பொறுத்தவரை, 'கள்' ஒட்டிக் கொண்ட பல வின் பெயர்கள் மங்கல வாழ்த்து முதல் வரந்தருகாதை வரை வளமாக வந்துள்ளன. இவ்வாறான பன்முகப் பயன்பாடுகளையும் நோக்கு மிடத்து, சிலப்பதிகார காலத்துக்குச் சிலபல நூற்றாண்டுகளுக்கு முன்பே கள் விகுதி வழக்காற்றில் நிலைகொண்டுள்ளது புலனாகும். அஃதாவது அதன் நீண்ட தொன்மை தெரியவரும்.

1-2. சங்க இலக்கியங்களில் மக்கள், மாக்கள் என்னும் உயர் பன்மைகள் ஆங்காங்கே இடம்பெற்றுள்ளன; ஓரிரு இடங்கள் தவிர, கள் விகுதி பின்னிணைப்பான அஃறிணைப் பன்மைகள் அறவே இல்லை. வழிகள் என்றொரு சொல் அகநானூற்றில் (களிற்றியானை

நிரை 18 : 10) நுழைந்துகொண்டது. ஐங்குறுநூற்றில் ‘மயில்கள்’ (291 : 1) உண்டு. ‘கலிப்பா’விலும் பரிபாவிலும் பலவின் பெயர்கள் சில இடம்பெற்றுள்ளன. இவ் இரண்டும் சங்க இலக்கிய வரிசையில் காலத்தாற் பிற்பட்டவை.

சங்கநூல்களில் கள் விகுதிப் பன்மைகளின் ஆதிக்கம் இல்லை என்ற ஏதுவினால் சங்கநூற் காலங்களில் கள்விகுதிச் சொற்களே இல்லை என்று கூறுதல் பொருந்தாது. சங்கநூற் காலங்களில் கள் விகுதிப் பன்மைகள் இலக்கியத்தில் பயின்று வாராமைக்கு மூன்று ஏதுக்கள் குறிப்பிடலாம். ஒன்று, மிக இறுக்கமான நடைகொண்ட அகவலின் இன்னோசைக்கு, ‘கள்’ இறுதியான ஓரசை இடர் விளைப்பதாகும். ‘‘தந்தையர் ஒப்பர் மக்கள்’’—இதனை, ‘‘தந்தைகள் ஒப்பர் மக்கள்’’ என உரக்க ஓதும்பொழுது ஏற்படும் உச்சரிப்பு இடர்ப்பாடும் இன்னோசைச் சிதைவும் வெளிப்படையானது. இருதிணைப் பன்மைக்கும் இது பொருந்தும். சங்கப்புலவர்கள் சொற்சிலம்ப வித்தையை ஏற்காதவர்கள்; தெளிவைச் சிதைக்க விரும்பாதவர்கள். அதனாலே ஒரு சொல்லை ஒரு பொருளிலேதான் பெரும்பாலும் கையாண்டு உள்ளார்கள். மது என்ற பொருளிலேதான் கள் என்னும் சொல் எங்கும் ஆட்சிபெற்றுள்ளது. எனவே, பொருளோட்ட வேகத்தை மயக்கும் - தடைப்படுத்தும் கள்விகுதிப் பன்மைகளை அவர்கள் கையாளவில்லை. ‘‘முன்றில் கள்ளடு மகளிர்’’ (பெரும்பாண் 1 : 239) ‘‘முன்றில்கள் அடு மகளிர்’’ என ஓதப்பட்டால் எழும் தொல்லை தெளிவானது. இஃது இரண்டாவது காரணமாகும். மரபை மீற முடியாத மரபு அல்லது பாரம்பரியம் இறுதிக் காரணமாகக் கொள்ளப்படலாம். எனினும், கள் விகுதிப் பன்மைகள் சிறப்பாக உயர்திணைப் பன்மைகள் சங்கம் ஏடுகளில் இடம்பெற்றதனால் அவ் விகுதிக்குரிய தொன்மை ஏற்க வேண்டியதே.

சங்க இலக்கியங்களில் அதிகம் பயின்றுவந்துள்ள மக்கள், மாக்கள், மாந்தர் என்ற உயர்பன்மைகளை உற்றுநோக்கும்போது மக்கள் என்னும் சொல்லே முதலில் வழங்கிய சொல் என உணரலாம்; சொல்மூலம் தெளிவாக உள்ளது. மக்களின் நீட்டம் மாக்கள்ஆக, மாக்களின் இன்னோசை நோக்கிய திரிபு மாந்தர் எனக்கொள்வது பொருத்தமானதே. ‘ர்’ என்னும் பன்மைவிகுதி,



கள்விகுதியோடு ஒப்பு நோக்கும் பொழுது ஒரு புதிய வழக்கீடு என திரு. எம். ஜே. வின்சன் சிந்திப்பது[2] இங்கே உளங்கொளப் பாலதாகும்.

1-3. கள் விகுதிபற்றிய தொல்காப்பியச் சிந்தனைகளைத் தெரிதற்கு முன்பு, திராவிட மொழிகளை ஒப்பியல்நோக்கில் ஆராய்ந்த அறிஞர்களின் கருத்துக்களைக் குறிப்பிடுவது பொருத்தம் ஆகலாம். தமிழ்மொழியின் கள் விகுதி பழங்கன்னடத்தில் கள்-க (G) ள் என நிற்பதும், மலையாளத்தில் கள்-க (G) ள், க்கள் ஆவதும், தெலுங்கில் ‘லு’ - ஆலு என வருவதும் அறிஞர் கால்டுவெல் ஆய்வின் முடிவுகள்.[3]

பழங்கன்னடத்தில் தந்தையர் தந்தைகள் எனவும், தந்தை தாயர் தந்தைதாய்கள் எனவும் உள்ளன எனக் கூறுவர்[4] திரு. யூல்ஸ் புளொக்.

இதுவரை அலசி எடுக்கப்பட்ட தரவுகளில் இருந்து முற்காலத் தமிழ்மொழியில் பன்மை குறிக்கும் விகுதி ‘கள்’ என்பதும், உயர் திணைப்பன்மையாக நின்று, காலப்போக்கில் அஃறிணைப் பன்மைக்கும் தொற்றியிருத்தல் வேண்டுமென்பதும், கள் விகுதியே (கள் > அள் > அல் > அர்) என நாளாவட்டத்தில் ‘அர்’ ஆகி இருத்தல் வேண்டுமென்பதும் புலப்படலாம். இன்றும், பேச்சுவழக்கில் ‘அவங்கள்’ என்பதை ‘அவங்கல்’ என ஒரு பகுதியினர் உச்சரிப்பதும், சலராகி சரராசி யானதும் உண்மையான செய்திகள். ‘கள்’ ‘அர்’ ஆனது யாப்புநோக்கிய[5] திரிபும் ஆகலாம். பழங்காலத்தில் கள் விகுதி பரவலாக வழங்கியது எனவும், இடையில் வழக்காறு அற்று மீண்டும் தொல்காப்பியர் காலத்தில் அல்லது அதற்குச் சற்று முன்பாகப் புத்துயிர் பெற்றுள்ளது எனவும் கருதலாம்.

2-1. இனி, தொல்காப்பியத்துக்கு வருவோம். தொல்காப்பியனார் தமிழ்மொழிக்கு இலக்கணம் கண்டவர் என்று மறுதலித்துக்கொண்டு வருவதைவிட, தமிழ் மொழியை நன்கு நெறிப்படுத்தியவர் எனக்கருதுவது மிகப்பொருத்தமாகும். தம் காலப் பேச்சுமொழியைத் திறம்பட ஆராய்ந்தவர்; தம்கால, தமக்கு முந்தையகால எழுத்து வழக்கையும் தெளிவாகத் தெரிந்தவர்.

எனவே, தொல்காப்பிய மொழிப்பொதுநிலைகளை முழுமையாகப் புரிந்துகொள்வது மிக இன்றியமையாததாகும்.

தொல்காப்பியத்திற்கு முன்பே அ, கள் விகுதிகள் இருதிணைப் பன்மைகளையும் உணர்த்தியிருத்தல் வேண்டும். அல்லது அவை விதியாகவோ விதிமூலங்களாகவோ தொல்காப்பியத்தில் இடம்பெற்றிருத்தல் இயலாது. திணைப்பாகுபாடு காணாத லீலா திலகம் என்னும் மலையாளக் கன்னி இலக்கண நூல், ''அனேகஸ்மின் ர், கள், மார், மர், பர், வர், வு, ப்ராயேண, (நூற்பா 34)[6] என ஆண் பெண் பன்மைகளைக் குறிக்கும் விகுதிகளில் ஒன்றாக, கள் விகுதியையும் குறிப்பிட்டிருப்பது இவ்விடத்து ஆழ்ந்து கவனிக்க வேண்டியதொன்றாகும். திணைப் பாகுபாடு செய்தபிற்பாடுதான் 'அ' பகரமெய்யுடன் சேர்ந்து உயர்திணைப் பன்மைக்கும் (தொல் 691), வகரமெய்யுடன் சேர்ந்து அஃறிணைப் பன்மைக்கும் (701) வேறுபடுத்திக் காட்டப்பட்டுள்ளது. முதன்முதலாக இவ் வேறுபாட்டினை விதியாகச் செய்த தொல்காப்பியனாரே முதல் நூற்பாவிலேயே 'ப' விகுதியை இருதிணைப் பன்மைக்குமாகப் பயன்படுத்திவிட்டார். 'எழுத்தெனப்படுப' என அஃறிணைக்கும், 'முப்பஃதென்ப' என உயர்திணைக்கும் பகரம் விகுதியாதல் அறிக. இம் முரண்பாட்டைக்கண்ட உரையாசிரியர், 'செய்யுளின்பம் நோக்கி வகரம் நீக்கிப் பகரம் இடப்பட்டது' எனச் சமாதானம் கண்டார். ''பகரமும் வகரமும் ஒத்த உரிமைய'' என நச்சினார்க்கினியர் குறிப்புரைத்தார். நச்சர் குறிப்பின் குறிப்பு அகரம் இருதிணைப் பன்மையையும் குறிக்கும் என்பதாகும்.

இந்நூற்பாவிலன்றி, ''சொல்லெனப்படுப பெயரே வினையென்று ஆயிரண் டென்ப அறிந்திசி னோரே'' (644), ''இடை எனப்படுப பெயரொடும் வினையொடும், நடைபெற்று இயலும் தமக்கு இயல்பு இலவே'' (734) என்ற இடங்களிலும் பகரவிகுதியை அஃறிணைப் பன்மை இறுதியாகக் கொண்டுள்ளார்.

2-2. 'அ' விகுதியின் நிலைப்பாடு இதுவாக, கள் விகுதியின் பயன்பாட்டுப் பரப்பைத் தொல்காப்பியத்தில் காண்போம். 'கள்' இறுதியான பலவின்பாற் சொற்களும் பலர்பாற் சொற்களும் தொல்காப்பியத்தில் இடம் பெற்றுள்ளன. பலவின்பால் : மிசைகள் (25),



மொழிகள் (196), மாண்புகள் (1098), வாயில்கள் (1139). பலர்பால் : மக்கள் (350, 404, 484, 648, 1532 — — —); மாக்கள் (1064). மரபியலில் இன்னும் ஒரு 'மாக்கள்' உண்டு — ''மாவும் மாக்களும் ஐயறி வினவே, பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே'' (1531). ''மாவும் புள்ளும்'' எனவே பாடங்கொண்டார் உரையாசிரியர். அதுவே சரியெனப்படுதலின் இதனைத் தவிர்த்துவிடுவோம். மக்கள் என்ற சொல் மக-கள் எனப் பிரியும். 'மக' இருதிணைக்கும் பொதுவான மூலமாகும்.

மக்கள் என்ற சொல் இருபொருள்களில் கையாளப்பட்டுள்ளது. மனிதர் என்பது ஒரு பொருள் (484, 648, 1532 — — —). பிள்ளைகள் என்பது மறுபொருள் (350, 1093, 1138). எனவே 'மக்கள்' இரு சொற்களாகக் கணிக்கப்படுதல் வேண்டும். 'பொருள் நிலை வேறுபாட்டால் சொல்லும் வேறெனவே கொள்க. அங்ஙனமாயினும் சொற்சுருங்குதற் பொருட்டு எழுத்தொப்புமை பற்றிப் பல பொருள் ஒருசொல் என்ப எனச் சிவஞான முனிவர் கூறுவது[7] மொழிநூலோருக்கும் உடன்பாடானதே, மொத்தத்தில் தொல்காப்பியத்தில் இடம்பெற்றுள்ள கள் விகுதி பின்னிணைப்பான உயர் பன்மைச் சொற்கள் மூன்று. பலவின்பாற் சொற்கள் நான்கு, உயர் பன்மைகள் மூன்றும் நூலடங்க மீண்டும் மீண்டும் வருவனவுமாகும்.

2-3. சங்க இலக்கியங்களிலும் தொல்காப்பியத்திலும் கள் விகுதியின் நிலைப்பாடு இவ்வாறாக, அஃறிணை இயற்பெயர் கள் விகுதிபெற்றுப் பலவின்பாலாகும் என விதிசெய்த தொல்காப்பியனார், கள் விகுதி பெற்றுப் பலர்பாற்சொற்கள் ஆகும் என விதி கண்டாரில்லை என நம்பமுடியுமா? அர், ஆர் விகுதிகள் மரியாதைப் பொருளில் ஒருமை கருதும் எனக் கண்ட தொல்காப்பியனார், மரியாதைக்குரியவர்களான பலரைச்சுட்டுவதற்குப் பிறிதொரு விகுதி வேண்டும் என உணரமுடியாதவரா? நுந்தை, தபு முதலாகப் பல சொற்களைத் தனித்தனி நுணுகிநுணுகி ஆராய்ந்த ஆசிரியர், சங்க இலக்கியங்களிலும் தமது நூலகத்தும் பயிலவந்த கள் விகுதி, பலர்பால் சுட்டுதலை விதியாக்கவில்லை எனக் கருதிக்கொள்வது எதன்பாற்படும்? எனவேதான், பெயரியலில் இடம் பெற்றுள்ள,

"கள்ளொடு சிவணும் அவ்வியற் பெயரே
கொள்வழி யுடைய பலவறி சொற்கே" (654)

என்ற நூற்பாவின் மூலபாடம் பின்வருமாறு ஆதல் வேண்டும்.

"கள்ளொடு சிவணும் அவ்வியற் பெயரே
கொள்வழி யுடைய பல ரறி சொற்கே."

'அவ்வியற் பெயரொடு சிவணும் கள் விகுதியை, பல ரறி சொற் களும் கொள்ளும் நெறியுடையன' என மொழிமாற்றிப் பொருள் காணலாம்.

தனியாக அஃறிணை இயற்பெயர் கள் விகுதிபெற்றுப் பலவறி சொல்லாகும் என்ற ஒன்றையே விதியாக்குவது தொல்காப்பியர் கருத்தாயின், "கள்ளொடு சிவணும் அவ்வியற் பெயரே பல்லவை நுதலிய என்மனார் புலவர்" என, நூற்பாவை இலகுபடுத்தி முடித் திருப்பார். அன்றியும், "சிவணும்" எனக் கூறிய பின்பு "கொள்வழி யுடைய" எனக் கூறுவது கூறியதுகூறல் என்னும் குற்றம் படுவதும் அன்றி, குழப்பம் விளைப்பதும் ஆகும்.

தொல்காப்பியப் பெயரியலில் மேற்படி நூற்பா, வைப்பு முறையிலும் இடந்தவறி நிற்றல் கருதத்தக்கது. பெயரியலில் 8-11 முடிய உயர்திணைப் பெயர்ப்பட்டியல் தரப்படுகின்றது. 12ஆம் நூற்பா உயர்திணைப் பெயர்களுக்குரிய புறனடையாக முடி கின்றது 13—14ஆம் நூற்பாக்கள் அஃறிணைப் பெயர்களைக் குறிப்பிடுகின்றன. அடுத்து வருவது "கள்ளொடு சிவணும்" (15) எனத் தொடங்கும் சூத்திரம் ஆகும். முன்னைய இரு சூத்திரங் களில் எங்காவது அஃறிணை இயற்பெயர் கூறப்படவில்லை. அப்படி யிருக்க, "கள்ளொடு சிவணும் அவ்வியற் பெயரென" எப்படிச் சுட்டிக் கூறமுடியும்? எனவே, 14ஆம் நூற்பாவை அடுத்து வர வேண்டியது, "தெரிநிலை உடைய அஃறிணை இயற்பெயர் ஒருமை யும் பன்மையும் வினையொடு வரினே" என்பதாதல் வேண்டும். இதனைத் தொடர்ந்து வரவேண்டியது அஃறிணைப் புறனடை நூற்பா வாகும். இதற்குப் பின்புதான் "கள்ளொடு சிவணும்" எனத் தொடங்கும் நூற்பாவின் அடைவு ஆகும். இந்த ஒழுங்கில் நோக் கும்போது இருதிணைப் பன்மைக்கும் பொதுவான கள் விகுதியைக்



குறிப்பிடுதல் சரியானது. உயர்திணை, அஃறிணை, கள்விகுதி பொதுவான இருதிணை, இருதிணைக்கும் பொதுவான பெயர்கள் என்ற ஒழுங்கில் வருவதே நூன்முறைக்கு இசைந்ததாகும்.

தான் வருவாராம் என்பது பேச்சு வழக்கில் 'தான் வருவாவாம்' என்றும், அவர் வரமாட்டாராம் என்பது 'அவ வரமாட்டாவாம்' என்றும் சொல்லப்படுகின்றன. இப்படியே பலரறிசொல் மனனிகலால் பலவறிசொல் ஆக்கப்பட்டுவிட்டது. எனவே, கள்விகுதிபற்றிக் குறிப்பிட்ட நூற்பாவில் பலரறிசொல் என்பதே மூலபாடமாதல் வேண்டும்.

இந்நூற்பாவுக்கு ஐந்தாவதாக இடம்பெற்றுள்ள "நிகழூஉ நின்ற பலர்வரை கிளவியின்" எனத் தொடங்கும் சூத்திரத்தில் (658) பலர் வரை கிளவி என்ற தொடருக்குப் பால்வரை கிளவி எனப் பாடவேறு பாடும் உண்டு.[8] இதுவும் மேற்படி முடிபுக்குத் தக்க அகச்சான்றாக அமைகிறது. ஆனாலும் 'மனனகண்டமும்'. பிரதி விபத்தும் இந் நூற்பாவைப் பலிகொள்ளவில்லை.

## ஆ. தொல். சொல்லதிகாரப்புறனடை நூற்பா

1-1. ஒரு மொழிக்கு முழுமையாக இலக்கணம் எழுதும் முயற்சியை மேற்கொள்ளும் ஒருவர், முன்னைய இலக்கணநூல் முடிபு களில் தம் காலத்திற்குப் பொருத்தமானவற்றை எடுத்தும், வழக்கு வீழ்ந்தவற்றை விடுத்தும், தம்கால வழக்கிற்கான புதுவிதிகளை ஆக்கியும் தொடங்கிய பணியை நிறைவாக்கிக் கொள்ளுதல் வேண் டும். அந்த இலக்கண நூலைப் படிக்கின்றவர் முன்னைய இலக்கண நூல்களையும் படிக்கவேண்டிய கட்டாய நிலைக்கு ஆளாதல் கூடாது.

1-2. எந்த இலக்கண ஆசிரியனும் மொழியின் முழுப்பரப் பையும் தனக்குள் கொண்டு வருதல் இயலாததாகும். "இனைத் தென அறியும் வரம்புதமக் கின்மையின்" (தொல். உரி. 98), "சொற்றொறும் இற்றிதன் பெற்றியென்றனைத்தும், முற்றமொழி குறின் முடிவில ஆதலின்" (நன். 461) எனவரும் நூற்பா வாசகங் களை நாம் அறிவோம். முற்றறிவின்மை, முடிவிலாமறதி, பொது விதி ஒன்று வேண்டாத அளவிற்கு வழக்குப்பரவலின்மை, பிணி

ஆதியன காரணங்களாகலாம். இதனாலே எஞ்சியவை புறனடை விதிகளால் முடிக்கப்படுகின்றன. சொல்லப்பட்டவற்றைக் கொண்டு சொல்லப்படாதனவற்றையும் அவற்றொடு சார்த்தி ஒப்புமை ஆக்கமுறையில் உணர்ந்துகொள்க, முடித்துக்கொள்க என்ற முறையிலேயே புறனடைவிதிகள் அனைத்துக்குமான பொதுவியல்பு சென்றுகொண்டிருக்கும். அன்றி, முழுமையான இலக்கணம் எழுதும் ஓர் ஆசிரியர் தம் நூலில் சொல்லப்படாதவற்றைத், தமக்கு முன்னூல்களாக உள்ளவற்றுடன் ஒட்டியுணர்ந்துகொள்க எனக்கூறுவது மொழியறம் ஆகாது. குன்றக்கூறல் என்னும் குற்றமும் ஆகும். வேண்டுமென்றால் பன்னிருபாட்டியலார் கூறுவது போல் 'இனிவரும் புதியனவற்றையும் இந்நூலுள் கூறியவற்றுடன் ஒட்டிக் கண்டுகொள்க' (ப. பா. 145) என்று புறனடை செய்வது மதிவளமானதாகும்.

2-1. மொழியியல் வல்லுனரான தொல்காப்பியர் இருவிதமாகப் புறனடை விதிகளைத் தெரியத்தருகின்றார். அவை எழுத்ததிகாரத்தில் ஒருவிதம், சொல்லதிகாரத்தில் மறுவிதமாக உள்ளன. எழுத்ததிகாரத்தில் தாம் விதித்தவற்றின் இயல்புக்கு வேறுபாடாகக் காணப்படுவனவற்றை வழக்கொடு சேர்த்து நுட்பமதியால் தெரிந்து கொளல் வேண்டும் என்பர் (483). எழுத்ததிகாரம் ஒலித்தன்மை, ஒலிக்கணஇயல்பு, ஒலிமாற்றம் பற்றியதாதலின் இங்கு வழக்கென்பது பேச்சு மொழியையே கருதும். இஃது தொல்காப்பியனாருக்கே உரிமையதான மொழியியல் புலமை நுட்பம் ஆகும்.

2-2. சொல்லதிகாரத்திலோ புறனடை விதியின் போக்கு வேறு கோலம் கொள்கின்றது; எடுத்தோதியவற்றைக்கொண்டு ஓதாதனவற்றையும் ஒட்டியுணர்க என்பர். இவ்விதமான புறனடை விதிகள் சொல்லதிகாரத்தில் நான்கு உண்டு.

அ. ''கிளந்த அல்ல வேறுபிற தோன்றினும்
கிளந்தவற் றியலால் உணர்ந்தனர் கொளலே'' (602)

ஆ. மேற்படி (781)

இ. ''அன்ன பிறவும் கிளந்த அல்ல
பன்முறை யானும் பரந்தன வரூஉம்



உரிச்சொல் எல்லாம் பொருட்குறை கூட்ட
இயன்ற மருங்கின் இனைத்தென அறியும்
வரம்பு தமக்கின்மையின் வழிநனி கடைப்பிடித்து
ஓம்படை ஆணையின் கிளந்தவற் றியலால்
பாங்குற உணர்தல் என்மனார் புலவர்''. (879)

ஈ. ''செய்யுள் மருங்கினும் வழக்கியல் மருங்கினும்
மெய்பெறக் கிளந்த கிளவி எல்லாம்
பல்வேறு செய்தியின் நூல்நெறி பிழையாது
சொல்வரைந்து அறியப் பிரித்தனர் காட்டல்.'' (946)

மேலே தரப்பட்ட நூற்பாக்களில் இறுதியானது சொல்லதிகாரம் முழுவதிற்குமான புறனடை. முன்னைய மூன்றும் இயல்களுக்குரியன; சொல், சொற்றொடர்கள்பற்றிய விடுபாடுகள் அவ்வவ்வியல்களின் புறனடை விதிகளோடு ஒட்டி உணரவேண்டியனவாகும். இறுதியான நூற்பாவை, புறனடை எனக்கொள்வதிலும் பார்க்க, சொற்களை வேறுபடுத்தி உணரும் வகையில் அவை பிரித்துக்காட்டப்படல் வேண்டும் என, எதிர்கால அறிவுப் பரம்பரைக்கு விடுக்கும் 'ஆணை' எனக்கொள்வது சரியெனப்படுகிறது. உரையாளர்களின் பிடியிலிருந்தும் பிடிப்பிலிருந்தும் விடுபட்டு, நாமே சுயமாக இந்நூற்பாவின் பொருளை அறிவோம்.

பேச்சு மொழியிலோ எழுத்து மொழியிலோ பொருள்தந்து நிற்கும் சொற்கள் அனைத்தையும், பல்வேறு விதிகளையும் விதிமூலங்களையும் கொண்டதான இந்நூல் எம்முறையில் நெறிப்படுத்தப்பட்டதோ, அந்நெறியிற் பிசகாது, சொற்களை எல்லைப் படுத்தி உணரும்வகையில் பிரித்துக்காட்டுக. செய்கை-விதி, விதிமூலம்.

மேற்படி கருத்தையே இந் நூற்பாவின் உள்ளார்ந்த பொருளாகக் கொள்ளவேண்டியுள்ளது. தமிழ் ஓர் ஒட்டுநிலைமொழி என்பதும் இதன்மூலம் உணரவைத்துள்ளார். தொல்காப்பியனார் சொல்லில் அகப்பாட்டு உறுப்புகளை வரையறைசெய்யும் சொல்லுறுப்பியல் அல்லது சொல்லியல் என ஓரியல் கண்டாரல்லர். ஆங்காங்கே சில சொற்களை உடம்பொடுபுணர்த்தல் என்னும் உத்திகொண்டு

பகுத்துக் காட்டியுள்ளார். எனவேதான், ''சொல்வரைந்தறியப் பிரித்தனர் காட்டல்'' என ஆணையிட வேண்டியதாயிற்று வீரசோழிய ஆசிரியர் தாது, கிரியாபடலங்கள் எழுதுவதற்கும் அவற்றைத் தூய்மைப்படுத்திப் புடம்பண்ணி, பவணந்தியார் பதவியல் கண்டதற்குமான அருட்டுணர்வை இந்நூற்பாவே அவர்களுக்கு ஈந்திருத்தல் வேண்டும். நச்சினார்க்கினியரும் இச் சூத்திரத்தில் வைத்தே வினைச்சொல் பகுபதவிளக்கம் கண்டார்.

3-1. நூற்பாவில் **'இந்நூல்'** என்ற சுட்டு, சீரமைப்புக்காக முன்னும் பின்னும் தள்ளப்பட வேண்டியதாயிற்று. **'இந்'** **'செய்தி'** யுடன் சார்ந்து ஒருசீராயிற்று. **'நூல்'** **'நெறி'** யுடன்கூடி மறுசீராயிற்று. சீரொடு சேர்ந்தே மன்னிக்க வேண்டி இருந்ததால் **'செய்தியின் நூல்நெறி'** எனப் பாட வேறுபாடு ஏற்பட்டது; மூலபாடம் பாழ்பட்டது. மனனமுறை நூற்பாவின் ஆன்மாவை மலினப் படுத்திவிட்டது.

3-2. இவ்வாறு பாடவேறுபாடு ஏற்பட்டதால் சேனாவரையர் **நூல்** என்பதற்குத் தொன்னூல் என்றும், அவை அகத்தியம் முதலாயின எனவும் பொருள்புகன்றார். நச்சினார்க்கினியரோ **நூல்நெறி** என்பதற்கு அகத்தியம் கூறிய நெறியில் என உரைத்தார். இவ்வாறு பொருள்கூறிய இருவரில் ஒருவராவது இந்நூற்பா இறுதியில் முடித்துக்காட்டிய முரண்பாடுகளைக்கொண்ட இலக்கியத் தொடர்களுக்கு, அகத்தியத்திலிருந்தோ அல்லது வேறு தொன்னூலிலிருந்தோ ஒரு விதியையாவது எடுத்துக்காட்டி, அவ் இலக்கியங்களை வழுவமைத்துக் கொண்டார்களல்லர் என்பது நினைக்கப்படவேண்டியதாகும்.

செய்யுளிடத்தும் வழக்கிடத்தும் முன்னரே முடிபுகூறப்படாத சொற்கள் இவை என்று தெரிந்து அவற்றை 'உத்திவகை இலக்கணத் தோடு படுத்திக்காட்டுக' இது உரையாசிரியர் உரைத்த உரை. அடிகளாரின் கருத்து **'இந்நூல்'** என்ற பாடத்திற்கே பொருத்தமானதாகத் தென்படுகின்றது. தெய்வச்சிலையார் 'நூல்' என்பதற்கு அகத்தியம் என்றோ, வேறு தொன்னூல் என்றோ கூறினாரில்லை. 'பிறநூன் முடிபினன் முடியினும் இலக்கணப் பிழைப்பின்றும்' என்ற குறிப்புடன் உரையை முடித்துக்கொண்டார். தெய்வச்சிலையாரின்



குறிப்பு இந்நூல் முடிபினால், எஞ்சியன முடிக்கப்படுவதே முறையானது என்ற பொருளையே குறிப்பாகப் புலப்படுத்துகின்றது அல்லவா? எனினும், 'பிரித்துக்காட்டல்' என்ற தொடருக்கு உரியதான பொருளைப் பொருத்திக் காட்டத் தவறிவிட்டனர்.

உரையாளர்கள் நால்வரும் மொத்தமாகப் பதினேழு சான்றுகளை இந்நூற்பா விதியால் முடித்துக்காட்டினர். இவற்றுட் பல முன்னைய புறனடைகளாலேயே முடித்துக் காட்டக்கூடியன. சில தவறாகப் பொருள் கொள்ளப்பட்டன. சில இயல்பிலேயேவழுவற்றன. ஆகவே, பரவைவழக்கிலும்சரி, பாடல் வழக்கிலும்சரி, சொற்களை வேறுபடுத்தி உணரும் வகையில் பிரித்துக்காட்டுக என்பதே நூற்பாவின் திரண்ட பொருளாகும்.

3-3. தொல்காப்பியத்துக்குப்பின் எழுந்த எந்த இலக்கண நூல் ஆசிரியராவது தம்முடைய நூலுக்கு முடிவான புறனடைவிதி எழுதும்பொழுது, எஞ்சியவற்றைத் தொன்னூல் அல்லது முன்னூல் நெறியில் முடித்துக்காட்டுக என்று எழுதிவிடவில்லை. இவ்வுண்மை கணிக்கப்படவேண்டும்.

அகத்தியமாயை தவிர்க்கப்பட்டால், தொல்காப்பியத்திற்குமுன் முழுமையான இலக்கண நூல்கள் இருந்தன என்பதற்கு ஆணித்தரமான ஆதாரங்கள் இருப்பதாக இல்லை. என்மனார் புலவர், என்ப என்ற பதங்கள் சில இடங்களில், 'யான் அணுகும்முறையில் இக் கருத்தினை அணுக முடிந்தவர்கள் இம் முடிவுக்குத்தான் வருவார்கள்' என்ற தருக்கபூர்வமான நம்பிக்கையை எடுத்துக்காட்டுவனவாகவும், பல இடங்களில் வெறுமனே **'நூற்பா நிரவல் பதங்கள்'** ஆகவுமே தென்படுகின்றன.

மீண்டும் நச்சினார்க்கினியரை அணுகுவோம். இந்நூற்பாவைப்பற்றி அதிகம் சிந்தனை செய்தவர் நச்சினார்க்கினியவரே. ''யான் விரித்துக் கூறுதனவற்றை விரித்துக் கூறிக் கொள்க' என அதிகாரப் புறனடை கூறுகின்றது என்ற புத்துணர்வுப் பொலிவுடன் அடிப்படையிட்டு, பதவுரை காணத் தொடங்கியவர் முதலாவதான பதவுரைப் பாதையிலே 'நூல்நெறி' என்பதற்கு, அகத்தியத்திற் கூறிய நெறியென எழுதி வழுக்கி விழுந்தாலும் மீண்டும் இரண்

டாவது உரையில் தம்மைச் சரிப்படுத்திக்கொண்டார். 'யான் கூறப்படும் இலக்கணங்களை முதல் நூல்களாற் கூறிக்கொள்க எனின் அது குன்றக்கூறல் என்னும் குற்றமாம் என்று உணர்க' என அடித்துக்கூறித் தம் உரையை முடித்துக்கொண்டார். 'நச்சர்' கருத்தின்படியும் '**இந்நூல்**' என்பதே மூலபாடமாதல் வேண்டும்.

"செய்யுள் மருங்கினும் வழக்கியல் மருங்கினும்
மெய்பெறக் கிளந்த கிளவி எல்லாம்
பல்வேறு செய்தியி் நூல்நெறி பிழையாது
சொல்வரைந்து அறியப் பிரித்தனர் காட்டல்."

இக் கட்டுரையில் தொல்காப்பியத்து இருநூற்பாக்களின் மூலபாடத்தை ஆராயும் ஆய்வுமுயற்சி மேற்கொள்ளப்பட்டுள்ளது. மூலபாடத் திறனாய்வுக்கு முகங்கொடுக்க வேண்டியனவான நூற்பாக்கள் சில பல இன்னும் உண்டு. இத்துறையில் வல்லுநர்களின் ஈடுபாடு அவசியமும் அவசரமும் ஆகும்.

மேற்கோள்

1. Jules Block; The Grammatical Structure of Dravidian Language; P. 9; Poona 1954.

2. J. A. Dixeme Serie Tome 17, Le pluriel Primitifen - M.

3. Caldwell, Dr., Comparative grammar of the Dravidian Languages P. 224 - 225; University of Madras: 1961,

4. Jules Block; The Gramatical Structure of Dravidian Language; P. 9; Poona 1954.

5. பார்க்க: வீரகத்தி, க; சொல்லிலக்கணத்தில் யாப்பின் செல்வாக்கு—வாணி கலைக் கழகம், கரவெட்டி 1968.

6. லீலாதிலகம்; இளையபெருமாள் மா; தமிழ்ப் புத்தகாலயம் ப. 74; 1971.



7. தொல்காப்பியச் சூத்திரவிருத்தி; ப. 59; நாவலர் பதிப்பு 1952.

8. தொல்காப்பியம் பக். 126; எஸ். ராஜம் வெளியீடு-1960.

குறிப்பு: 1. தொல்காப்பிய நூற்பாக்கள் எஸ். ராஜம் பதிப்பில் (1960) உள்ளபடி எடுத்தாளப்பட்டுள்ளன.

2. தொல். நூற்பா இலக்கங்கள் தொல்காப்பியம் கழக வெளியீடு (344) உஆம் பதிப்பில் (1954) உள்ளபடி குறிக்கப்பட்டுள்ளன.

ஜனவரி 1981 - மதுரையில் நடந்த ஐந்தாவது உலகத் தமிழாராய்ச்சி மகாநாட்டில் (08-01-1981) வாசிக்கப்பட்டது இக் கட்டுரை. கருத்துப்பரிமாறல்களின் பின். குழு அமர்வுக்குத் தலைமை வகித்த பேராசிரியர் வண. வீ. எம். ஞானப்பிரகாசம் எஸ். ஜே. அவர்கள் தமது முடிப்புரையில் தொல். சொல்லதிகாரங்கள் பதிப்பிக்கப்படும்போது இத்திருத்த நூற்பாக்கள் அடிக்குறிப்பாகச் சேர்க்கப்படுதல் வேண்டும் என விதந்துரை செய்தார்கள்.

# 4. தொல்காப்பியமும் நிகழ்கால இடைநிலையும்

முதன் முதலாகத் தமிழ்மொழியை நன்கு நெறிப்படுத்திய சிறந்த இலக்கண நூல் தொல்காப்பியம். தொடராக்கத் தொடர்புகள், சொற்களின் நிலைப்பாடுகள், எழுத்தொலிப் பண்புகள் பற்றிய நுட்பமான செய்திகளை அதிகமான விதிவடிவங்களில் தந்துள்ளது தொல்காப்பியம். தொடர் இயைபுக்கான வினைமுற்று விகுதிகள் இவை எனக் குறிப்பிட்டாலும், வினை மூலங்கள் அனைத்துக்குமான மாதிரி வேர்ச்சொல் 'செய்' எனத் தெரியவைத்தாலும், சொற்களைப் பகுதி விகுதி இடைநிலை எனப் பிரித்தறியும் முயற்சியைத் தொல்காப்பியம் மேற்கொள்ளவில்லை. ''சொல் வரைந்தறியப் பிரித்தனர் காட்டல்'' என அம் முயற்சி அடுத்த தலைமுறையினருக்கு விடப்பட்டுள்ளது.[1] இருந்தாலும் தொல்காப்பியம் 'உடம்பொடு புணர்த்தல்' ஆகப் பயன்படுத்தியுள்ள கால இடைநிலைகளைப் பிரித்தறிந்து காணமுடியும்.

தொல்காப்பியம் ''காலந்தாமே மூன்றென மொழிப'' (வினை : 201) எனத் திட்டவட்டமாகத் தெரிவித்து, அடுத்த நூற்பாவால் அவை இறப்பு நிகழ்வு எதிர்வு எனவும் தெளிவாக்கி உள்ளது. தொல்காப்பியகாலம் அன்று, அதற்கு வெகு காலத்திற்கு முன்னரே காலம் மூன்றாகப் பிரிக்கப்பட்ட வழக்காறு ஏற்பட்டிருத்தல் வேண்டும். ''சிறப்புடை மரபின் அம்முக் காலமும்'' (எச்சம் : 31) இதனை உறுதிப்படுத்துகின்றது. இல்லையெனில் 'சிறப்புடை மரபு' எனத் தொல்காப்பியனாரால் விதந்து கூறியிருக்க முடியாது.

காலம் மூன்றெனத் தெளிவாக்கியவர் கால இடைநிலைகளை நூற்பாக்களில் பயன்படுத்திய சொற்கள் மூலம் உணரவைத்துள்ளார். ஒரு நூற்பாவில் உள்ளடங்கும் சொற்களும் தொடர்களும் இலக்



கணத்திற்கு உட்பட்டனவேயாகும். இவற்றை இலக்கணம் ஆகக் கொள்வதற்குரிய நெறி உடம்பொடுபுணர்த்தல் என்னும் உத்திக் குரியது எனக்கொள்வது இலக்கணமரபாகும்.[2]

இம்முறையே நோக்கும்பொழுது, நிகழ்கால இடைநிலைகள் அனைத்துக்கும் மூலம் எனக்கருதக்கூடிய இடைநிலையைத் தொல்காப்பியம் வெளிப்படையாகக் குறிபபிடுகின்றது. அது ஊநின்று > ஆநின்று என்பதாகும்.

*'நிகழூஉ நின்ற பால்வரை கிளவியின்*
*உயர்திணை ஒருமை தோன்றலும் உரித்தே*
*அன்ன மரபின் வினைவயி னான'* (பெயர் : 19)

இந்நூற்பாவில் இடம்பெற்றுள்ள ஊநின்ற என்பது நிகழ்கால இடைச்சொல் ஆகும். ''நிகழும் காலத்துச் செய்யும் என் கிளவி'' என்பதில் நிகழும்காலம் பெயரெச்சத்தொடர் (நிகழ்பகுதி. உம் நிகழ்கால விகுதி ஆதல்போல் இங்கும் நிகழூஉநின்ற கிளவி என்பது பெயரெச்சத்தொடர் ஆகும். (நிகழ் + ஊநின்ற + அ).

இந்நூற்பா உரைவிளக்கத்தில் நிகழூஉநின்ற என்பது நிகழா நின்ற என்றவாறு, என இளம்பூரணரும் சேனாவரையரும் குறிப்புரைத்தது கருதப்பட வேண்டியதாகும்.

தொல்காப்பியர் காலத்திலேயே ஊ > ஆ ஆகும் வழக்காறு உண்டு எனக் கருதலாம். வினைஎச்ச வாய்பாடுகளைப் பட்டியற்படுத்தும் நூற்பாவில் செய்யா என்னும் எச்ச வாய்பாடு கூறப்படவில்லை. ஆனாலும் எழுத்ததிகாரத்தில் ''செய்யா என்னும் வினைஎஞ்சு கிளவி'' எனக் கூறப்பட்டுள்ளது. அதனாலேதான் வினைஎச்வாய்பாடுகள் கூறும் நூற்பா விளக்கத்திலும் 'உண்ணூ வந்தான் என்பது இப்பொழுது வழக்கினுள் உண்ணா வந்தான் என நடக்கும்' என இளம்பூரணரும், 'உண்ணு உண்ணா என ஆகாரமாயும் வரும்' எனச் சேனாவரையரும் எடுத்துரைக்கத் தவறவில்லை. 'இப்பொழுது' என உரையாசிரியர் கூறினாலும் தொல்காப்பியகாலம் ஆகிய அப்பொழுதே ஊகாரம் ஆகாரம் ஆகும் வழக்கு உண்டு என்பது தொல்காப்பிய அகச்சான்றாலும் புலப்படுகின்றது.

ஒன்பது நூறு = தொளாயிரம். இங்கு நூறு என்பதில் உள்ள ஊகாரம் ஆகாரமாகியதைத் தொல்காப்பியர் 'இயற்கைத்து' எனக் குறிப்பிடுவர்.

ஒன்பான் முதனிலை முந்துகிளந் தற்றே
முந்தை ஒற்றே ளகாரம் இரட்டும்
நூறு என்கிளவி நகார மெய்கெட
ஊ ஆ ஆகும் இயற்கைத் தென்ப
ஆயிடை வருதல் இகார ரகாரம்
ஈறு மெய் கெடுத்து மகரம் ஒற்றும். (எழு. குற்றியல். 58)

எனவே தொல்காப்பியர் காலத்தில் ஊநின்ற, ஆநின்ற என்ற இரு இடைநிலைகளும் வழக்கில் இருந்திருத்தல் வேண்டும். சங்க இலக்கியங்களில் ஊநின்ற என்ற வழக்காறு காணப்படவில்லைதான் என்றாலும் அப்படிப் பயன்படுத்திய இலக்கியங்கள் அழிந்திருக்கலாம் அல்லது மாற்றுவடிவமான ஆநின்று வழக்கில் வந்த பிற்பாடு, ஊநின்று பயன்படுத்தப்பெற்ற இடங்கள் ஆநின்று ஆக மாற்றி எழுதப் பட்டிருக்கலாம். எதுவானாலும் இவ் இடைநிலையின் தொன்மையும், எல்லா நிகழ்கால இடைநிலைகளுக்கும் மூலம் **(நின்று)** ஆன தன்மையும் ஏற்கப்படவேண்டியதே.

சங்க இலக்கியங்களில் ஒன்றான ஐங்குறு நூறிலும், கலி, பரிபா தவிர்ந்த சங்க இலக்கியங்களுக்குப் பிற்பட்டதும் - சங்க இலக்கியம் அல்லாத ஏனைய இலக்கியங்களுக்கு முற்பட்டதும் எனக் கருதக் கூடிய சிலப்பதிகாரத்திலும் ஆநின்று நிகழ்கால இடைநிலை ஆக இடம்பெற்றுள்ளது. சிலம்பில் கின்று என்ற இடைநிலையும் (ஓசனிக் கின்ற உறுவெயிற் கடைநாள் 14 : 25) வழக்குப் பெற்றுவிட்டது. 'கின்று' பரிபாடல் தவிர்ந்த சங்க இலக்கியங்கள் எதிலும் இல்லை.

(1) கவிழ்மயிர் எருத்தில் செந்நாய் ஏற்றை
குருளைப் பன்றி கொள்ளாது கழியும்
சுரநனி வாரா நின்றனள் என்பது
முன்னுற விரைந்த நீர்உரைமின்
இன்னகை முறுவல் என்னையத் தோர்க்கே. (397



(2) "சொல்லாடாள் சொல்லாடா நின்றாள்' (சிலம்பு 18 : 10) மேற்குறிப்பிடப்பட்ட ஐங்குறுநூற்றுப் பாடலில் வாரா நின்றனள் என்பதற்கு, வருகின்றனள் என்றே அதன் உரையாசிரியர்கள் கருத்துரைத்துள்ளனர். சிலம்பு வரிக்கு, 'சொல்லாடாளாய் சொல்லாடுகின்றவள். என அடியார்க்குநல்லார் பொருள் உரைத்தும் உள்ளார். இறுக்கம் வேண்டிநிற்கும் சங்கச் செய்யுள் அமைப்பு ஆநின்று கின்று முதலான நெகிழ்ச்சி உண்டாக்கும் நிகழ்வு இடைநிலைகளைத் தவிர்த்துக்கொண்டிருப்பதில் வியப்பில்லை.

(ஆ) நின்று என்பது மிகப்பழைய இடைநிலை என்பதாலும் நிகழ்கால எல்லா இடைநிலைகளுக்கும் மூலம் ஆன 'நின்று' என்பதனை உள்ளடக்கியதாலுமே, வினை மூலங்களை (தாது) எடுத்துரைக்கும் முயற்சியை முதன்முதலாக மேற்கொண்டுள்ள வீரசோழிய ஆசிரியர் நிகழ்கால இடைநிலைகளை வரிசைப்படுத்தும் நூற்பாவில் (74) நின்று என்பதனை முதல்வைத்தார். நின்று எனக் கூறினாலும், ஆ என்னும் இடைச்சொல் பெற்றல்லது முடியாது எனப் பெருந்தேவனார் பொருளுரைத்தார். வீரசோழிய ஆசிரியர் அவ்வாறு கூறியது யாப்புநோக்கிய 'முதற்குறை' என்னும் செய்யுள் விகாரம் என ஏற்புரை காண்பதிலும் பார்க்க, **'நில்'** என்பதே நிகழ்காலம் காட்டும் மூல அடிச்சொல் என்று கருதுவது பொருத்தமாகும்.

(1) நின்ற சொல்லர் நீடுதோன்று இனியர் (நற்றிணை 1)

(2) "செய்நின்ற நீலம் மலர்கின்ற தில்லைச்சிற்றம்பலவன்"
(அப்பர் தேவாரம் நாலாந் திருமுறை 774)

இவ் இடங்களில் **'நின்ற'** (வினைஅடியும் கால இடைநிலையும் ஒன்றான நிலை) என்பது நிகழ்காலத்தை உணர்த்துவது அனைவரும் ஒப்புக்கொள்ளக்கூடியதாகும். ஆனாலும் நின்று என்ற நிகழ்கால இடைநிலை மூலம், வடிவஒருமை மயக்கநிலை (நிகழ்கால இடைநிலை, இறந்தகால வினைஎச்சம், ஐந்தாம் வேற்றுமை நீக்கப் பொருளில் வரும் சொல்லுருபு) தவிர்க்கப்படுவதற்காக இருநிலைகளை எடுத்துள்ளது. ஒன்று ஆகாரத்தை முன்னீடு ஆகப்பெற்று ஆநின்று ஆனது. மற்றது நின்று கின்று ஆனது. இவ் இருநிலைகளிலும்

தொன்மையானது ஆநின்று என்பதாகும். ஆநின்று என்பதாலும் சில இடங்களில் மயக்கநிலை ஏற்பட்டுவிட்டது.

உண்ணா நின்றான்—உண்கின்றான்—நிகழ்காலம்

உண்ணா நின்றான்—உண்டு நின்றான்—செய்தென் எச்சம்

உண்ணா நின்றான்—உண்ணாது நின்றான்—எதிர்மறை வி. எ.

இந்த நிலையில் தெளிவுகருதி நின்று கின்று ஆனது இயல்பாவதே. காளாவட்டத்தில் கின்று கிறு எனத் திரிந்தும்கொண்டது. கிறு ஒலிநயம்நோக்கி 3 கின்று ஆகவில்லை. கின்று ஐம்பால் மூவிடத் திற்கும் வருகின்றது. கிறு அஃறிணையில் படர்க்கை இறந்தகாலப் பன்மைக்கு வருவதில்லை. வருகிறன என வருவதில்லை.

(2)

நிகழ்கால இடைச்சொற்கள்பற்றிச் சேனாவரையரும் நச்சினார்க் கினியரும் தெளிவான கருத்துக்களை முன்வைத்துள்ளார்கள். ''அவைதாம் அம் ஆம் எம் ஏம்'' எனத் தொடங்கும் வினை இயல் 5 ஆம் நூற்பா உரையில், 'இனி அவை நிகழ்காலம்பற்றி வருங்கால் நில், கின்று என்பனவற்றோடு வரும். நில் என்பது லகாரம் னகார மாய் றகாரம் பெற்று நிற்கும் எனச் சேனாவரையர் குறிப்பிட்டார். 'இவை நிகழ்காலம்பற்றி வருங்கால் நில் > நின்று என்பனவற்றோடு வந்து முற்கூறியவாறே நிற்கும்' என உரைத்த நச்சினார்க்கினியர் இன்னும் ஒருபடி மேற்சென்று ''நின் கின் என நிற்கும் என்றுமாம்' எனச் சரியாகக் குறிப்பிட்டுள்ளார். நிற்பது நிகழ்காலம். எனவே நில் என்னும் அடிச்சொல் நிகழ்கால இடைநிலை மூலம் ஆகக் கொள்ளப்பட்டது பொருத்தமே. இன்னும், நகரமெய் சங்க இலக் கியங்களிலும் தொல்காப்பிய நூற்பா அமைப்புகளிலும் முக்காலத் திற்கும் பொதுவான நிகழ்வுகளைக் குறிக்கும் இடைநிலையாகவும், ஒருசில இடங்களில் நிகழ்காலம் குறிப்பதாகவும் இடம்பெற்றதை நோக்கும்போது நிகழ்கால இடை நிலைகளுக்கான மூலம் 'நில்' என்பது எத்துணைப் பொருத்தமானது என்பது தெரியவரும். நிகழ்வு எதிர்வு காட்டும்மகர மெய் முன்னீடாக உகரம் பெற்று உம் ஆனது



போல் நின்று என்பதும் முன்னீடாக ஆகாரம் பெற்றுக்கொண்டது. இரண்டாவது நிலைப்பாட்டில் ககரமெய் நகரமெய் ஆகி, கின்று ஆனது. நகரம் ககரமாக மாறுவதும் உண்டு. பொருந்து > பொருக்கு. ஒன்று வினை, மற்றது பெயரானாலும் பொருந்தி நிற்றல் என்ற பொருளில் மாறுபடவில்லை. மேலும் இறந்த காலத்தையும் எதிர்காலத்தையும் உணர்த்தும்[4] சகரம் நிகழ்காலத்தை உணர்த்துவது நிகழ்ச்சித் தொடர்ச்சிக்குப் பொருத்தமானதே.

இவ்வாறு தொல்காப்பியத்தில் இடம்பெற்றுள்ள ஊநின்று ஆநின்று ஆகி, பிற்பட்ட காலங்களில் நின்று கின்று ஆகி, மேலும் கின்று கிறு ஆகி நிகழ்கால இடைநிலைகளாக நமது மொழியில் நிலைபேறு கொண்டுள்ளன. தொல்காப்பியத்தில் உடம்பொடு புணர்த்தல் மூலம் கொள்ளப்படுவன விதிமூலங்கள் எனக் கருதலாம். அவையும் அவற்றின் பல்வேறு திரிபுகளும் பின்னைய இலக்கண நூல்களில் விதிகள் ஆகக் கூறப்பட்டுவிட்டன.

(3)

காலத்துக்குக்காலம் நிகழ்கால இடைநிலைகளின் தோற்றம் பற்றிய பல்வேறு ஊகங்கள் அறிஞர்களால் தெரிவிக்கப்பட்டுள்ளன. ஆநின்று என்னும் இடைநிலை ஆகிநின்று என்பதிலிருந்து தோன்றி யிருக்கவேண்டுமென கால்டுவெல் கருதுவர். ஆகி, ஆயி, ஆய், ஆ என்று இவ்வாறு திரிந்துகாணப்படலாம் என்பர். கால்டுவெல் கருத்தின்படி ஆகிநின்று என்பதின் மரூஉமொழி ஆநின்று என்ப தாகும். ஆகிநின்று என்பது நிச்சயமாக இறந்தகாலத் தொட ராதலின் அவர் கருத்தை ஏற்றுக்கொள்ளமுடியாமல் இருக்கின்றது. உதாரணமாக, 'வெறுங்கையனாகி நின்றான், என்னும் வாக்கியத்தைப் பார்க்கலாம்.

அடுத்து, கின்று பற்றிய ஊகங்கள் ஆகும். கு + இன்று = கின்று எனத் தமது மொழிநூலில் குறிப்பிடும் வரதராசனார், கின்று கிறு என்பவை தவறுபட இடைநிலை எனப் பிரித்து உணர்த்தப் பட்டன எனவும் கூறி, அடிக்குறிப்பாகப் போகின்றார் முதலியவற்றை போ + கு + இன்று + ஆன் எனப் பிரிக்காமல் போ + கின்று + ஆன் எனப் பிரித்து 'கின்று' இடைநிலை எனத் தவறாகக் கொள்ளப்பட்டு

விட்டது என்றும் கூறுவர். இக் கருத்தினை வரலாற்று வழியாகவும் நோக்கவேண்டியுள்ளது. 'கின்று' முதன்முதலாகச் சிலம்பிலும் பரிபாடலிலும்தான் கையாளப்பட்டுள்ளது. இவற்றுக்கு முன்னைய இலக்கியங்களில் இப்படிப் பயன்படுத்தியது அறவே இல்லை, இதனை 'கின்று என்னும் நிகழ்கால இடைநிலை பழந்தமிழில் (எட்டுத்தொகை பத்துப்பாட்டில்) இல்லை' என அவர்களே ஒத்துக்கொள்ளுகின்றார்கள். அப்படியானால் இது எப்போது பிழையாகப் பிரிக்கப் பட்டிருத்தல் வேண்டும்? ஒன்றில் இளங்கோ அடிகள் பிழையாகப் பிரித்திருத்தல் வேண்டும். அல்லது பரிபாடல் ஆசிரியர் பிழையாகப் பிரித்திருத்தல் வேண்டும் (பரிபாடல் 22 : 35). இவர்கள் இருவரும் இலக்கண நூலுணர்ச்சி அற்றவர்கள் எனக் கருதமுடியுமா? அப்படிப் பிழையாகப் பிரித்துக்கொண்டாலும் இவர்களுக்குப் பின்னுள்ள அறிஞர்கள் கண்மூடித்தனமாக இதனை ஏற்றுக்கொள்ளமாட்டார்கள்; அதுவும் அந்தக் காலத்தில் பிழைபட்ட பரிபாட்டுக்கு மொழிநூல் ஆசிரியரே சான்றாகக் குறிப்பிடும் நன்னூலார் அங்ஙனம் என்பதைத் தவறாகப் பிரித்தது உண்மையே. ஆனால் அதனைப் பின்பற்றி, நாவலர் இலக்கணச்சுருக்கம் உட்பட இலக்கண நூல் எழுதியவர்களில் எவராவது 'ங' மொழி முதலாகும் எழுத்துகளில் ஒன்றாகுமெனக் குறிப்பிடவே இல்லை, நன்னூலாரின் பிழையான பிரிபாடு நன்னூலார் உடனேயே நின்றுவிட்டது. எனவே மொழிநூல் ஆசிரியரின் கருத்து ஏற்கக்கூடியதன்று என்றாகிறது.

இனி, ஆகின்று போகின்று முதலான எழுத்து மொழிச் சொற்கள் ஆகியது போனது எனப் பொருள்தரும் இறந்தகாலக் கட்டமைப்புகள் ஆகும். இவை அமைப்பால் இறந்தகாலமாயினும் வழக்கால் நிகழ்காலமே உணர்த்துகின்றன எனக்கூறி, இவ் உதாரணங்களில் காணப்படும் கின்று என்பதே நாளடைவில் நிகழ்கால இடைநிலை ஆகிவிட்டது என ஒரு கருத்தும் அறிஞர்கள் சிலரால் முன்வைக்கப்பட்டுள்ளது. மிகுதியாகப் பழைய இலக்கியங்களில் பயின்றுவரும் இவ் அமைப்புக்குப் பழைய உரையாசிரியர்களில் எவராவது நிகழ்காலப் பொருள் எழுதவில்லை, ஆகியது என இறந்தகாலப் பொருளே வரைந்துள்ளனர். இன்னும் கி. பி. 8ஆம் நூற்றாண்டுக்குச் சற்றுமுற்பட்டதெனக் கருதப்படும் புறப்பொருள் வெண்பா மாலையிற்கூட இந்த வடிவ அமைப்பும் அது காட்டும் இறந்தகால நிலைப்பாடும் மாற்றம் எய்தவில்லை. ''சுழல் அழலுள் வைகின்றுசோ'' (பு. வெ. பா. பாடாண் 40). இங்கும் வைகியது எனவே உரை காணப்படுகிறது. அன்றியும், வைகின்று போகின்று முதலானவை நிகழ்காலத்தில் நிலைபெற்றுவிட்டனவெனக் கருதினால் அவற்றுக்கு மேலும் 'து' என அஃறிணை ஒருமைவிதி கொடுக்கப்படவேண்டிய தேவை இல்லை அன்றோ. நின்று கின்று ஆகி நிகழ்காலச் சொற்கள் ஏற்பட்ட பிறகு, ஒலி ஒப்புமை கருதி, ஆகின்று முதலான தொடர்களுக்கும் நிகழ்காலம் கொள்ளப்பட்டது எனக் கருதலாம்.



இதுவரை ஆராயப்பட்டவற்றிலிருந்து எல்லா நிகழ்கால இடைநிலைகளுக்குமான மூலம் 'நின்று' என்பதும், அது ஆநின்று, கின்று என இருநிலைகளை எடுத்துள்ளது என்பதும், ஆநின்று மிகத் தொன்மையானது என்பதும் புலப்படும்.

**மேற்கோள் :**

1. பார்க்க: வீரகத்தி, க.—ஐந்தாம் உலகத்தமிழ் மாநாடு கருத்தரங்கு ஆய்வுக் கட்டுரைகள் (தொகுதி-3) 1981: பக். 157-8.

2. பார்க்க: இளம்பூரணம், தொல். பொருளதிகாரம், கழக வெளியீடு 1961, மரபியல்: 112.

3. இலக்குவனார், எஸ். Tamil Language 1961: பக். 150.

4. பார்க்க: நச்சினார்க்கினியம், சொல். நூற்பா 204 உரை.

# 5. சொல்லிலக்கணத்தில் யாப்பின் செல்வாக்கு

## புகுமுகம்

### பாவும் பாட்டும்

(1) 'பா' என்பது பரந்துபட்டுச் செல்லும் ஓசை என்பர் நச்சினார்க்கினியர். 'இனியவர்' கருத்துப்படி எதில் ஓசை இல்லையோ எது ஓசை இல்லையோ அது பாட்டும் அன்று என்பதும் தெளிவாகும். பாவே பாட்டான தமிழ்ச் சொல் அமைப்பு நுட்பம் இன்புறத்தக்கது; தமிழ் இனிமைக்குச் சான்று பகர்கின்றது. ஓசைக்குள்ள இனிமை தமிழிற்கு என்க.

பா என்ற பொதுமை மாத்திரமன்று. வெண்பா, அகவல், கலி, வஞ்சி என்ற ஓசைக்கூறுபாடுகளே பாவகைகளின் பெயர்களுமாகி, ஓசைதான் பாடல் என்ற கருத்தை வலிவு செய்கின்றன. ஏன், பாவினங்கள் கூடத் தாழிசை, துறை, விருத்தம் என ஓசை அடிப் படையிலே பெயர்பெற்றதை நாமறிவோம். இதனைப்போலும் ''பாட்டைத் திறப்பது பண்ணாலே'' எனப் பாரதியாரும் கூறினார்.

### யாப்பிலக்கணம்

(2) ஓசைதான் உரைநடையையும், பாடலையும் பிரித்து வைக்கின்ற எல்லைக் கோடாகும். பாட்டின் மைய முனையாகிய ஓசை முறிவடையும்போது கவிதையின் மூச்சே நின்றுவிடும். அது கவிதை ஆகாது. வெற்றுச் சொல்லீட்டமே. வெவ்வேறு ஓசையின் ஒழுங்கான வரையறைகளே யாப்பிலக்கணமாகி, இலக் கணத் துறைகளில் ஒன்றாய், விரிவும் தெளிவும் பெற்றுள்ளது. நேர்சீராயில்லாத சீரமைப்பும், தளைப்பிணிப்பும் பாவின் நீரோசையைச் சிதைத்து அதனை உரை நடைக்குள் தள்ளிவைக்கும்.

'எழுத்திற்கு மாத்திரை கோடலும் அசைத்தலும் சீர் செய்தலும், தளையறுத்தலும் ஓசைபற்றி அல்லது எழுத்துப் பற்றியன்று.'[1]

இவ்வாறு கூறும் சிவஞான முனிவரின் விளக்கம் ஓசைக்குள்ள செல்வாக்கைத் தெளிவாகத் தெரியவைக்கின்றது. ஓசை மாசுபடா திருப்பதற்காக எழுத்தும், சொல்லும் சொற்றொடரும் வேண்டிய இடங்களில் யாப்புக் கட்டுக்கோப்புக் கருதித் தம் இயல்பான அமைதி நிலையிழந்து, அஃதாவது இலக்கணத்திலிருந்து உறழ்ந்தோ, பிறழ்ந்தோ அல்லது திரிந்தோ வழிவிலகி, ஓசை ஓட்டத்திற்குப் பாதை திறந்துவிடுதல் வேண்டும். அன்றி, ஓசை இவற்றிற்கு விலகிக் கொடுக்காது. விலகின், யாப்புப் பொருத்துக்கள் விலகி, யாப்பு யாப்பற்றதாய்விடும். எனவே, ஓசை வரையறைகளுக்கு அமைதி கூறும் யாப்பிலக்கணம் பேராற்றல் வாய்த்ததாதல் வேண்டும். அன்றேல் இலக்கண உறழ்ச்சிகளும் விரிவும் ஏற்பட நியாயமில்லை.

### யாப்பும் எழுத்தும்

(3) ஏறத்தாழத் தமிழ் இலக்கியப்பரவை முழுவதும் செய்யுள் மயமே. அதனால் செய்யுள் வடிவங்களின் வன்மையும் தன்மையும் எழுத்து, சொல் இலக்கணங்களைத் தம் செல்வாக்கிற்கு உட்படுத்தி இருப்பதில் வியப்பும் புதுமையும் இல்லை. யாப்பின் செல்வாக்கு இன்றேல் எழுத்திலக்கணம் இத்துணை விரிவுடைய இடமுமில்லை. இலக்கண நூலோர்களும் உரையாளர்களும் ஆண்டாண்டுக் கூறிய விளக்கங்கள் இதனை அடித்துக் கூறுகின்றன. சார்பெழுத்துக்களின் விரிவு, பல்வகைப்பட்ட விகாரங்கள் எல்லாம் யாப்பின் தாக்கமே.

மேற்படி உண்மையை நினைவுபடுத்துவதுடன் நின்று, இனி, சொல் சொற்றொடர் அமைதியில் உறழ்ச்சிகளும் விரியும் ஏற்பட்ட தற்குரிய காரணம் யாப்பமைதியே என்பதைக் காண்போம். இலக்கண உறழ்ச்சியும் இலக்கணமே. இம் முயற்சி இலக்கண ஆய்வுத்துறைக்கு அளிக்கும் புதுமையாகலாம்.

## உருபு மயக்கம்

**இலக்கண உறழ்ச்சி**

(4) ஒவ்வொரு வேற்றுமைக்கும் குறிப்பிட்ட உருபு உண்டு. இந்த இலக்கண நியதி சில வேளைகளில் மீறப்படுவதும் உண்டு. (வேண்டுமென்று அன்று) ஒரு வேற்றுமைக்கு இன்னொரு வேற்றுமையின் உருபு வருவதே உருபு மயக்கம் ஆகும். அப்படி வந்தாலும், பொருளைப் பொறுத்தே வேற்றுமை துணியப்படும் என்பர் தொல்காப்பியனுர்.[2] உருபு மயக்கத்துக்கு விளக்கம் தரும் சேனவரையர், 'உருபு தன் பொருளில் திர்ந்து பிற உருபின் பொருட்டாயும் நிற்கும்'[3] எனக் கூறித், 'தன் பொருளில் தீர்தல் இலக்கணம் அன்மையின், இதனை இலக்கணத்துடன் உறழ்ந்து வருவனவற்றோடு வைத்தார்'[3] என நுண்மையானதோர் குறிப்பும் தந்துள்ளார். உருபு மயக்கம் ஓர் இலக்கண உறழ்ச்சி என்றாரே தவிர, அதன் காரணத்தைச் சேனவரையர் கண்டாரல்லர். அவர்க்கு அது தேவையும் அன்று. ஆனல் அதற்குக் காரணம் உண்டு. சீர்தளைச் சிதைவைத் தடுப்பதற்கும், இன்னேசையை எழுப்புவதற்குமாகத்தான் இவ்வுறழ்ச்சிகள் ஏற்பட்டிருத்தல் வேண்டும் என்பதே அக் காரணமாகும்.

**சீர்தளைச் சிதைவுத்தடுப்பு**

(5) பழைய இலக்கண உரையாளர் குறிப்புக்களிலிருந்து இவ்வுண்மையைப் பரிசோதனை செய்வோம். சீர்தளைச் சிதைவுகளைத் தடுக்கும் வழிகளில் ஒன்றாய் உருபு மயக்கம் ஏற்பட்டுள்ளது என்ற முடிபை அப்பொழுது இலகுவாக ஒப்புக்கொண்டுவிடலாம். வெண்பாவும், அகவலுமே மிகப் பழைய பாடல்கள் என்பர் ஆய்வாளர். அடுத்துக், கட்டளைக் கலித்துறையைக் குறிப்பிடலாம். இவற்றில் (அ) வெண்பாவும் (ஆ) கட்டளைக் கலித்துறையும் மிகக் கடுமையான யாப்பு விதிகளுக்கு உட்பட்டவை. சிறிது சிதையினும் முழு அமைப்புமே மாறிவிடும். முதற்கண் வெண்பாவின் யாப்பமைதிக்காக உருபு மயங்கிய முறையை ஆராய்வோம்.



### அ. வெண்பா

உ-ம் : 1 "பற்றி விடாஅ இடும்பைகள் பற்றினைப்
பற்றி விடாஅ தவர்க்கு"[4]

இக் குறளுரையில் 'விடாஅ தவர்க்கு என்பது வேற்றுமை மயக்கம் என்பர் பரிமேலழகர்.[4] வேற்றுமை மயக்கமெனினும் உருபு மயக்கமெனினும் ஒக்கும்.[5] ஏன் உருபு மயங்கியது? உருபு மயங்காவிட்டால் 'விடாஅ தவரை' எனக் குறள் முடியும். முடியவே, 'தவரை' என்பது 'தேமா! ஆகிச் செப்பலோசையைச் சிதைத்துவிடும். வெண்பாவின் இறுதிச்சீர் காசு, நாண், மலர், பிறப்பு என்ற ஒன்றில் முடிதல் வேண்டுமென்ற விதியைச் செயலற்றதாக்கிவிடும். 'ஐ' உருபிற்குப் பதிலாக, 'கு' உருபு கொடுப்பதன் மூலம் இறுதிச்சீர் 'தவர்க்கு' ஆகிறது. இது 'பிறப்பு' (நிரைபு). வெண்பா உயிர் பிழைக்கின்றது. இது யாப்பின் செல்வாக்கன்றி வேறென்னை?

"அவ்வித் தழுக்கா றுடையானைச் செய்யவள்
தவ்வையைக் காட்டி விடும்." (குறள்—167)

இங்கும் 'தவ்வையைக் காட்டி' என்பது வேற்றுமை மயக்கம் எனக் குறிப்பிடுவர் பரிமேலழகர். பொருட் சிறப்புக் கருதித் 'தவ்வையை' வேற்றுமை மயக்கமாகக் கொள்வதிலும் பார்க்க, 'உடையானை' வேற்றுமை மயக்கமாகக் கொள்வது பொருத்தமாகும். 'காட்டுதல்' என்ற வினை இங்கு நாலாம் வேற்றுமையை அடுத்து வருதலே சிறப்பு என்க. தவ்வைக்கு அழுக்காறுடையானைக் காட்டுவதிலும், அழுக்காறுடையவனுக்கு, 'இனி உனக்கு உரியவள் அவளே' எனத் தவ்வையைக் காட்டுதலே இயல்பானதாகும்; குற்றவாளியின் உள்ளத்தை உணரச் செய்வதற்கு வழியுமாகும். இக் கண்ணேட்டத்தில் 'உடையானுக்கு' என்பது அப்படியே நிற்க முடியாது. நிற்பின் அஃது நாலசைச் சீராகும். இதனைத் தடுக்க உடையானை என உருபு மயங்கவேண்டும். இக் கருத்தன்றிப் பரிமேலழகர் கருத்தை ஏற்றுக்கொண்டாலும், 'தவ்வைக்கு' என நிற்கும்போது வல்லின மெய் அடுத்தடுத்து வருவதால் குறள் இன்னேசையிற் குறுகிவிடுகின்றது.

உ-ம் : 2 ''உயிருடம்பின் நீக்கியா ரென்பர் செயிருடம்பிற்
செல்லாத்தீ வாழ்க்கை யவர்.''[6]

இங்கும், 'செயிருடம்பொடு' கனிச்சீராகாமல் நிற்பதற்காகச் 'செயிருடம்பின்' என நிற்கின்றது. இது யாப்பின் தாக்கமே.

'இனி, சங்க அடிவான இலக்கியமெனக் கருதப்படும் அம்மையார் அற்புதத் திருவந்தாதியில் பெரிய புராண உரையாளர் உருபு மயக்கம் எனக் குறிப்பிடும் ஓரிடத்தைப் பார்ப்போம்.

உ-ம் : 3 ''என்பருக் கோலத்து எரியாடும் எம்மானுர்க்
கன்பரு தென்நெஞ் சகத்து.''[7]

'எம்மானுர்க்கு' என்பது உருபுமயக்கம் என்றெழுதுவர் —திரு. சி. கே. சுப்பிரமணிய முதலியார்.[8] 'எம்மானுரிடத்து' என நிற்க வேண்டியது உருபு மயக்கம் பெற்றது. உருபு மயக்கம் இன்றேல், ஏழாம் வேற்றுமை ஏற்கும் போது நாலசைச் சீராகிவிடும். இதனைத் தடுக்க உருபு மயங்குதல் அவசியமாயிற்று. அன்றித், தொகைத் தொடராதற்கும் இடமில்லை.

## ஆ. கட்டளைக் கலித்துறை

தளை நியமம், எழுத்தெண்ணிக்கை, இறுதிச்சீர் ஏகாரத்தால் முடிவது என்ற யாப்பு விதிகளுக்கு உட்பட்டது கட்டளைக் கலித்துறை. சொல் அமைதியின் இயல்பான ஓட்டம் யாப்பு விதிகளுக்கு உடன்படாத எல்லையில் சொல் அமைதியை யாப்பமைதி மாற்றி விடுகிறது. கோவைக் கலித்துறைகளில் இவ்வுண்மையைப் பரக்கக் காணலாம்.

உ-ம்: 1 ''துரும்புறச் செற்றகொற் றத்தெம்
பிரான்றில்லைச் சூழ்பொழிற்கே.''

எனத் தொடங்கும் செய்யுள் உரையில், 'பொழிற்கு வேற்றுமை மயக்கம்' என எழுதினர் திருக்கோவை உரையாளர்.[9] ஏனே உருபு இங்கு மயங்கிற்று? 'சூழ்பொழிற்கண்' என நிற்பின் ஏகாரத்தால் முடியவேண்டுமென்ற விதி தகர்ந்துவிடும். 'சூழ்பொழிற்



கண்ணே' என நிற்குமெனில் நான்கசைச் சீராகி, ஓரெழுத்துக் கூடும். கூடவே, கட்டளைக் கலித்துறை கட்டுவிடும்.

உ-ம் : 2. ''ஆலத் தினுலமிர் தாக்கிய கோன்தில்லை
அம்பலம்போல்.''[10]

மேற்படி திருக்கோவைக் கவிதை அடி, 'ஆலத்தையமிர் தாக்கிய கோன்தில்லை யம்பலம்போல்' என நிற்க வேண்டும். 'ஆலத்தினுல்' என நிற்பது யாப்பு ஏற்படுத்திய மாற்றமே.

### இன்னேசை

(6அ) இன்னேசைக்காகவும் ஆங்காங்கே உருபு மயக்கம் ஏற்பட்டுள்ளது. ''இன்னிசை அளபெடை'' என்பதுபோல் இவற்றை 'இன்னிசை உருபு மயக்கம்' எனக் கூறிவிடலாம். சிலப்பதிகாரம் மங்கல வாழ்த்துப்பாடல் நான்கு சிந்தியல் வெண்பாக்களைக் கொண்டது. அவற்றில் ஒன்று :

''பூம்புகார் போற்றுதும் பூம்புகார் போற்றுதும்
வீங்குநீர் வேலி யுலகிற் கவன்குலத்தோ
டோங்கிப் பரந்தொழுக லான்.''

'உலகிற்கு—உலகின்கண், உருபு மயக்கம்,' என்பர் அடியார்க்கு நல்லார். 'வீங்குநீர் வேலியுலகிலவன் குலத்தோர்' என நின்ருலும் 'செப்பல்' சிதையாது. ஆனுல் 'உலகிற் கவன் குலத்தோடு' எனப் பாடும்போது இழுமென்னேசை பயக்கின்றது. இன்னெரு காரணமும் உண்டு. இதற்கு முந்திய சிந்தியல் வெண்பாவில் இரண்டாம் அடி, ''நாமநீர் வேலியுலகிற் கவனளிபோல்'' என வருதலால் ஓசை இசைவு அல்லது தகவுக்காக ''வீங்குநீர் வேலி யுலகிற் கவன் குலத்தோடு' எனவும் வரவேண்டியதாயிற்று. பாடி இன்புறுக.

(6-ஆ) இத் தொடர்பில் நன்னூல் உரையாளர்கள் அனைவரும் ஒருமுகமாகக் காட்டிய உதாரணம், ''நாகுவேயொடு நக்கு வீங்குதோள்'' என்பதாகும் (இத்தோள் எதன் தோள் என்பதே தெரியவில்லை, முதலுரையாளரால் வலிந்து வரைந்த தோளுமாக

லாம்.) வேயை>வேயொடு எனத் திரிந்ததால் உருபு மயக்கம் ஆயிற்று. இம் மேற்கோள் வெண்பா அல்லது கட்டளைக் கலித் துறையின் அடிகளாகாது; அகவல் அடிகளாக வரக்கூடியது. எனவே, சீரமைதிக்காக இங்கு உருபு மயங்க இடமில்லை. இன்னிசை கருதியே மயங்க வேண்டும். நாகு வேயை நக்கு வீங்கு தோள் எனக் கூறும்போது ஏற்படும் ஓசைத் தளர்ச்சி எஃகு செவிக் குப் புலனாகும்.

அடுத்துத், தொல்காப்பிய உரையாளர்கள் உட்பட நன்னூல் உரையாளர்களும் ஒருமித்துக் காட்டிய உதாரணம்,

“கிளையரி நாணற் கிழங்கு மணற்கீன்ற
முளையோ ரன்ன முள்ளெயிற்றுத் துவர்வாய்.”

என்பதாகும். இவை அகவலடிகள். இன்னிசைக்காகவே 'மணற்கு' என உருபு மயங்கிற்று தவிர, இன்னொரு காரணமும் உண்டு. நான்காம் வேற்றுமையாகக் கொள்வதே உண்மையைக் கூறுவதாகும். மணலிற்றான் கிழங்கு முளைவிட முடியும் அல்லவா? இதனை மாறனுக்கு மகன் என்பதுபோற் காண்க.

இதுவரை, உருபு மயக்கம் என்னும் இலக்கண உறழ்ச்சி சீரமைதிக்காகவும், இன்னோசைக்காகவுமே ஏற்படுகின்றது என்ற உண்மை தெளிவாக்கப்பட்டுள்ளது. இனி, வினை எச்ச வாய் பாடுகள் பல்குவதற்குக் காரணமும் யாப்பமைதியே என்பதைக் கவனிப்போம்.

## வினையெச்சம்

### வினையெச்ச வாய்பாடு

7. செய்து செய்யூச் செய்பு செய்தெனச்
செய்யியர் செய்யிய செயின் செயச் செயற்கு என
அவ்வகை ஒன்பதும் வினையெஞ்சு கிளவி.”[12]

இவை தொல்காப்பியர் கூறும் வினையெஞ்சு கிளவிக்குரிய வாய் பாடுகள். பின்வந்த நன்னூலார்,



‘செய்து செய்பு செய்யாச் செய்யூச்
செய்தெனச் செயச் செயின் செய்யிய செய்யியர்
வான்பான் பாக்கின வினையெச் சம்பிற
ஐந்தொன் றாறுமுக் காலமும் முறைதரும்”[13]

என வினையெச்சவாய்ப்பாடுகளைக் கூறி, அவை காலங்காட்டும் அடைவையும் கூறியுள்ளார்.

### செய்யா'

8. தொல்காப்பியத்திற்குப் பின்னெழுந்த நன்னூல், நேமிநாத ஆசிரியர்கள் 'செய்யா' என்றொரு வாய்பாடும் கூறியிருக்க தொல் காப்பியனார் வாய்பாட்டு வரிசையில் அதனை வைக்கவில்லை. எனினும், “செய்யா என்னும் வினையெஞ்சு கிளவியும், அவ்வியல் திரியா தென்மனார் புலவர்”[14] என எழுத்து அதிகாரத்திற் கூறுதலின் அவ்வாறு ஒரு வாய்பாட்டை ஏற்றுக்கொண்டாரா யிற்று. வாய்பாட்டு வரிசையிற் கூறாததற்குக் காரணம் அருகிய வழக்கு அல்லது 'செய்யூ' என்னும் வாய்பாட்டின் திரிபு அது எனக் கருதியிருக்கலாம். வினையெச்ச வாய்பாடுகளுக்குக் காலவிளக்கம் தரும்போது, 'அஃது (உண்ணூ) உண்ணா என ஆகாரமாயும் வரும்'[15] எனச் சேனாவரையர் இதனை அடக்கிக்கொண்டார். நேமிநாத ஆசிரியர் 'செய்யா' என்னும் வாய்பாட்டைச் சொல்லி, 'செய்யூ' என்பதைத் தவிர்த்தார். இவற்றிலிருந்து விளங்குவது செய்யூ> செய்யா அல்லது செய்ய> செய்யூ என ஆகியிருத்தல் வேண்டும் என்பதேயாகும். அதாவது ஒன்று காட்டும் காலத்தையே மற்றதும் காட்டும் என்பதே.

### கால அடைவும் காட்டுமாறும்

9. இதற்குமுன், இவ்வினையெச்ச வாய்பாடுகள் எவ்வாறு காலங் காட்டுகின்றன என்பது ஆழ் சிந்தனைக்குரிய ஒரு கேள்வியாகும். நன்னூலார் 'ஐந்தொன்று ஆறு முக்காலமும் முறைதரும்' என்றாரே அன்றி, அவை எவ்வாறு காலங் காட்டும் எனக் கூறவில்லை. தொல்காப்பியமோ காலங் காட்டும் அடைவையும் கூறவில்லை, முறையையும் சொல்லவில்லை. நன்னூலுக்கு முதலுரை கண்ட மயிலைநாதரும் இவ் வினையெச்ச வாய்பாடுகள் எவ்வாறு காலங்

காட்டும் எனக் குறிப்பிடவில்லை. சங்கர நமச்சிவாயர்தாம் முதன் முதலாக, 'செய்தென்பது இடைநிலையாலும், ஏனைய இறுதிநிலை யாலும் காலங்காட்டின'[16] என்று குறிப்பிட்டார். சிவஞான முனிவர் சங்கர நமச்சிவாயரை வழிமொழிந்தார். தொல்காப்பிய உரையாளர்களோ 'செய்து' என்பது தவிர்ந்த இறந்தகால வினையெச்ச வாய்பாடுகளுக்கு (ஏனைய இங்கு ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்படவில்லை) 'தொழில் நிகழ்ச்சி முன்பின்' அல்லது காரண காரிய அடிப்படையில் கால விளக்கம் தந்தார்கள். அன்றி, ஏனையன விகுதிகளால் காலம் காட்டும் எனக் குறிப்பிடவில்லை. வினையெச்ச விளக்கத்தில் 'தொல்லுரையாளர்' (தொல்காப்பிய உரை யாளர்) 'நன்னூலுரையாளரைக்' (நன்னூல் உரையாளர்) காட்டிலும் விரகுடையர் போலும்.

## விகுதியும் காலமும்

10. விகுதிகள் காலம் காட்டும் எனக் குறிப்பிட்ட சங்கர நமச்சிவாயர் எவ்விகுதி எக்காலத்தைக் காட்டும் என்பதையும், அதற்கான ஆதாரங்களையும் காட்டியிருத்தல் வேண்டும். அன்றிப், பொதுப்படையிற் பேசுவது சரியாகாது. 'செய்து' என்னும் வாய்பாட்டைப் பொறுத்தவரையில் பிரச்சினையில்லை. கால இடை நிலை தெளிவாக உள்ளதால் தொல்லையும் இல்லை. செய்யூ என்னும் வாய்பாட்டைப் பொறுத்தவரையில் தொல்லையுண்டு. அவர் கருத்துப்படி, ஊகாரம் இறந்தகாலம் காட்டுதல்வேண்டும். அவ்வாறு காட்டுதற்கு எள்ளும் இல்லை, எண்ணெயுமில்லை. எனவே, செய்யூ என்னும் வாய்பாடு எவ்வாறு இறந்தகாலம் காட்டும் என ஆராய்வது அவசியம் என்க. இதற்கு யாப்பமைதி வழிச்சென்று விடை காண்போம்.

## திரிபுநிலையும் யாப்பும்

11. "படுமகன் கிடக்கை காணூஉ
ஈன்ற ஞான்றினும் பெரிதுவந் தனளே"[17]

இங்கு, 'காணூ' என்பதன் கருத்து 'கண்டு' என்பதாகும். காணூ என்பதற்குப் பதிலாக 'கண்டு' என நின்றால் இடர்ப்பாடு



என்னை? இறுதியடியில் முதற்சீர் உயிர் முதலாக நிற்றலின், குற்றியலுகரப்புணர்ச்சி விதிப்படி பாடல் பின்வருமாறு நிற்க வேண்டும் :

"படுமகன் கிடக்கை கண்
டீன்ற ஞான்றினும் பெரிதுவந் தனளே."

இதன்படி முதலடியின் இறுதிச்சீர் ஓரசையாய்விட்டது. இதனால் சீர்குறைந்து அகவல் ஓசை நொண்டியாகிவிடும். புணர்ச்சி விதிகளின்படி ஏற்படும் இவ் விடர்ப்பாட்டைத் தவிர்க்க, 'கண்டு' என்ற எச்சத்தைக் 'காணூ' எனத் திரித்துவிட்டான் நுண்மதிக் கவிஞன். ஆகவே, 'செய்யூ' என்பது செய்து என்பதன் யாப்பு நோக்கிய திரிபே என்க. 'செய்து' என்னும் வாய்பாட்டு எச்சங்கள் (கடதற ஊர்ந்த உகர வாய்பாடு) உயிர் முதற்சீர் வரும்போது, ஓரசையாக மாறும் ஊனத்தைத் தவிர்க்கும் வழிகளில் இதுவும் ஒன்றெனக் கொள்ளலாம். 'செய்யூ' என்பதன் வரலாறு இது எனக் கூறவே 'செய்யா' என்பதற்கும் அது ஒக்கும். கலாநிதி சாமிநாத ஐயரின் புறநானூற்றுப் பதிப்பில் உள்ள 'காணு'[18] என்னும் மறுபாடம் மிக ஊன்றிக் கருதத்தக்கது. பொன்னா லாகிய அணியும் பொன்னுவதுபோல், செய்து என்பதன் திரிபுகளும் செய்து என்பதே.

## எதுகைத் தொடை

12. உயிர் முதலான சொற்கள் வரின் இவ்வண்ணம் ஆகு மெனில் மெய் முதலான சொற்கள் வரின் திரிபுக்கு இடமில்லையே எனத் தடையெழுப்பலாம். ஒரு சொல் ஆட்சிக்கு வந்தபின் வந்த தற்கான காரணத்தை மக்கள் அறிவதில்லை, அறிய வேண்டுவது மில்லை. உயர்ந்தோர் வழக்கு என்பதால் அது வாழ்வு பெற்று விடுகிறது. எனினும் மெய் முதலான சொற்களிலும் 'செய்து' என்னும் வாய்பாடு திரிபுபெறும் எனக் கருதுவதற்கும் யாப்பமைதி வழியே ஆதாரம் உண்டு. பின்வரும் நன்னெறிச் செய்யுளில் எதுகைத்தொடை கருதி இவ்வகைத் திரிபு ஏற்பட்டுவிட்டது.

"பிறர்க்குதவி
செய்யாக் கருங்கடல்நீர் சென்று புயல்முகந்து
பெய்யாக் கொடுக்கும் பிறர்க்கு."[19]

பெய்யாக்கொடுக்கும்—பெய்து கொடுக்கும். இங்கே எதுகைத் தொடை நோக்கியே 'பெய்து' என்பது 'பெய்யா' எனத் திரிந்தது என்று புரிந்துகொள்ள நேரம் வேண்டியதில்லை.

**திரிபுக்கு அமைதி**

13. மேற்படி திரிபுகளை இலக்கண ஆசிரியர்கள் அமைதியாக்கிக்கொண்டார்களா என்பது அடுதத கேள்வி. ஆம், கொண்டார்கள். "சொற் றிரியினும் பொருள் திரியா வினைக் குறை"[20] எனப் பவணந்தியார் அமைதி கூறியதும் அறிக. இச் சூத்திரத்திற்கு விளக்கம் தந்த சிவஞான முனிவர், "வினைக்குறை எனப் பொதுப்படக் கூறினமையால், வினையெச்சங்களுள் ஒன்று ஒன்ருய்த் திரிந்துவருவன பிறவும் உளவேல் அவையும கொள்க"[21] என்ருர். இன்னும் தெளிவாகத், "தத்தம் உருபு ஒன்று ஒன்ருய்த் திரிந்து வருதல் உளவேனும், தம் பொருளில் திரியாவாம் வினையெச்சஙகள்"[22] எனக் கூறியுள்ளாரே மயிலைநாதர். நன்னூலார் கூறிய இவ் அமைதிச் சூத்திரத்திற்குச், செயவென் எச்சத் திரிபுகளை மாத்திரம் உரையாளர் காட்டியமை இலக்கணப் பேறிழப்பாகும்.

**முடிபு**

14. இறந்தகாலத்தின் ஏனைய வாய்பாடுகளும், ஏனைய கால வாய்பாடுகளும் விரிவஞ்சி எடுத்துக்கொள்ளப்படவில்லை. இருந்தும், யாப்பிலக்கணம் சொல், சொற்றொடர் இலக்கண அமைதிகளைத் தடுத்தாட்கொண்டு தன் செல்வாக்கிற்கு உட்படுத்தியிருப்பது இது வரை ஆராயப்பட்டவற்றிலிருந்து தெளிவாகின்றது.

**மேற்கோள்**

1. சிவஞான முனிவர், தொல்காப்பியச் சூத்திரவிருத்தி கழக வெளியீடு 1964 பக். 33.

2. தொல், சொல்: கணேசையர் பதிப்பு 1938, பக். 164.



3. தொல், சொல்: கணேசையர் பதிப்பு 1938, 164-165.

4. திருக்குறள், பரி-உரை: கழக வெளியீடு, 1961, பக். 128.

5. நன்னூல் மூலமும் உரையும் (தமிழ் இலக்கணம்) பவானந்தம்பிள்ளை பதிப்பு, 1922, பக். 186.

6. திருக்குறள் பரி-உரை: கழக வெளியீடு 1961, பக். 120.

7. காரைக்காலம்மையார், அற்புதத்திருவந்தாதி, செய்யுள் 1.

8. திருத்தொண்டர் புராணம் (மூன்ரும் பகுதி-1-2 பாகங்கள்) 1943, பக். 900.

9. திருக்கோவையார் மூலமும் உரையும்: நாவலர் பதிப்பு 1967, பக். 240.

10. திருக்கோவையார் மூலமும் உரையும்: நாவலர் பதிப்பு 1957, பக். 51.

11. சிலப்பதிகாரம், அடியார்க்குநல்லார் உரை: உ.வே.சா. பதிப்பு 1927, பக். 37.

12. தொல் சொல், சேனவரையர் உரை: கணேசையர் பதிப்பு 1938, பக். 268.

13. நன்னூல் மூலமும் விருத்தியுரையும்: நாவலர் பதிப்பு 1957, பக். 316.

14. தொல் எழுத்து: கணேசையர் பதிப்பு 1952, சூ. 222 (பக். 205).

15. தொல் சொல்: கணேசையர் பதிப்பு 1938, பக். 270.

16. நன்னூல் மூலமும் சங்கர நமச்சிவாயர் உரையும் உ. வே. சா. பதிப்பு 1953, பக், 259.

17. புறநானூறு மூலமும் உரையும்: உ. வே. சா. பதிப்பு 1923, பக். 392.

18. புறநானூறு மூலமும் உரையும்: உ. வே. சா. பதிப்பு 1923, பக். 392.

19. சிவப்பிரகாசசுவாமிகள், நன்னெறி நீதிநூற்றொகை முதற்பாகம்: ஸ்ரீ மகள் கம்பெனி 1951, பக். 118.

20. நன்னூல் மூலமும் விருத்தியுரையும், நாவலர் பதிப்பு 1957, சூ. 346 (பக். 320).

21. நன்னூல் மூலமும் விருத்தியுரையும், நாவலர் பதிப்பு 1957, சூ. 346 (பக். 321).

22. நன்னூல் மயிலைநாதர் உரை: உ. வே. சா. பதிப்பு 1946, பக். 177.

# 6. குறிப்புவினை

தமிழ்மொழி வினைச்சொல் உலகில் குறிப்புவினை ஒரு நரசிம்ம அவதாரம் ஆகும். மொழிக்குச் சுருக்கமும் செறிவும் தர, வலிவும் வனப்பும் உண்டாக்க நம் முன்னோர்கள் செய்துகொண்ட வினைச் சொல்லாக்க நுட்ப ஏற்பாடு இது எனலாம். கால எழுத்துகள் இன்றி, பெயரடிகள் பகுதிகள் ஆக, பால்/எண் காட்டும் இலக்கணக் கூறுகள் விகுதிகள் ஆக முடிந்து நிற்கும் இவ் வினை அமைப்பு நமது மொழிக்கேயான சிறப்பியல்புகளில் முதன்மையானதாகும். குறிப்புவினை தமிழ்மொழிக்கே உரிய தனித்துவமான ஓர் அமைப்பு எனவும், இவ்வகை அமைப்பை வேறு எந்த மொழியிலும் தாம் காணவில்லை எனவும் வீரமாமுனிவர் கூறுவர்: முனிவரின் கருத்து முன்னோர்களின் வினையாக்கத்திறனைப் பறைசாற்றுகின்றது!

அ

1. இவன் மலைநிலத்தைத் தனது பிறப்பிடம் ஆக்கிக் கொண்டவன்.

2. வானத்தையும் உன் ஆட்சிப்பரப்பின் வரம்பாக உடைய நீ அல்லவோ பெருமகன்!

3. யானைக்கூட்டம் உலாவும் அஞ்சத்தக்க காடுகளையும் தன்னகதடக்கிய நாட்டினை ஆட்சிபுரிபவனே! நீ அன்றோ வந்தனைக்குரியவன்!

4. உனக்கே உரியவான செய்திகள் சில உரைப்பேன். என்னுடைய சில வார்த்தைகளைச் செவிமடுப்பாயாக.

ஆ

1. இவன் வெற்பன்

௨. ''வானவரம்பனை நீயோ பெரும''

3. ''யானைய முன்பின் கானக நாடனை நீயோ பெரும'' (புறம். 5)

4. ''நினவ கூறுவல் எனவ கேண்மதி'' (புறம். 35)

அ பிரிவில் தரப்பட்ட வாசகங்கள் ஆ பிரிவில் சுருக்கமும் செறிவும் உள்ள வடிவங்களாக உள்ளன. வெற்பன், வரம்பனை, யானைய, நாடனை, நினவ, எனவ ஆகிய வினைக்குறிப்புகள் செறிவையும் தாக்கத்தையும், அழகையும், பொலிவையும், யாப்புத் திட்பத்தையும் ஓசை வளத்தையும் தந்து நிற்பதை அறிகிறோம், உணர்கிறோம், சுவைக்கிறோம்.

இவன் மலைநிலத்தைத் தனது பிறப்பிடம் ஆக்கிக்கொண்டவன் என்று நீட்டி அடித்துக் கூறுவதிலும் 'இவன் வெற்பன்' எனக் கூறிவிடுவது எவ்வளவு சிக்கனமானதாகவும் உச்சரிப்புக்கு எளிமையானதாகவும் அமைந்துவிடுகிறது. இச்சான்றுகளில் இருந்து குறிப்புவினை ஆக்கம் மொழிக்கு மிடுக்கும் மெருகும் தருவதை எவரும் புரிந்துகொள்ளலாம். இச் சந்தர்ப்பத்தில் வங்காள மொழிபற்றி விவேகானந்தர் அழுத்தமாகக் குறிப்பிட்ட ஒரு கருத்தை இங்கே குறிப்பிடுவது மிகப் பொருத்தமாகும்.

''இந்நாட்களில் வங்காளி மொழியில் எழுதுவோர் வினைச் சொற்களை மிகுதியாய் வழங்குகின்றனர். இதனால் மொழியினுடைய ஆற்றல் குறைகின்றது. வினைமுற்றுச் சொற்களால் சொல்லப்படும் கருத்தினைப் பெயரெச்சங்களால் புலப்படுத்தினால் மொழிக்கு ஆற்றல் கூடும். இனிமேல் அந்த நடையிலே எழுத முயல்வாயாக. 'உத்போதன்' பத்திரிகையிலே அந் நடையில் சில கட்டுரைகள் எழுத முயல்வாயாக. மொழியிலே வினைகளை வழங்குவதன் கருத்து எதுவென்பது உனக்குத் தெரியுமா ? முற்றுவினை கருத்தினை நிறுத்துகிறது, வினைமுற்றுகளை அதிகமாக வழங்கினால், அது விரைந்து, மூச்சு விடுவது போலப் பலவீனத்துக்கு ஓர் அடையாளமாகும். அதனால் அன்றோ வங்காளி மொழியில் நன்றாகச் சொற்பொழிவாற்றல் இயலாததாகின்றது.''



விவேகானந்தர் வினைமுற்றுகளைக் கையாளுவதால் சொல்லப்படும் பொருளின் தாக்கம் ஆற்றல் இழந்துபோவதாகக் குறிப்பிட்டு, பெயரெச்ச அடைகளைப் பயன்படுத்தல் வேண்டும் என மொழிக்குரல் கொடுத்தார். ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே நம் முன்னோர்கள் இதனை உணர்ந்தனர் போலும் ! அடை மொழிகளைத் தந்து பொருள் நுட்ப வெளிப்பாட்டுக்கான வழக்கியல்புகளைத் தெரிவித்ததும் அன்றி, தெரிநிலை வினைமுற்றுகளுக்கு மாற்றீடாகக் குறிபபுவினைமுற்றுகளைக் கையாண்டு மொழியாற்றல் பீறி எழ, வழிகண்ட 'தொல்'லோர்களின் மொழியாக்க நுட்பங்கள் உள்ளத்தைப் புல்லரிக்கச் செய்கின்றன.

(2)

இவ்வகை வினைக்குறிப்பின் ஆக்க முயற்சிகளுக்கான நோக்குகள் எவையாகலாம் ? அவற்றைப் பொதுமைப்படுத்திப் பார்ப்போம்.

1. தாக்கமும் சுருக்கமும் கருதிய தொடரமைப்புச் சிக்கனம்.

2. அசாதாரண வெளிப்பாடுகள், நிகழ்ச்சிகளைக் குறிப்பிடுதல். காலப்போக்கில் ஏற்படும் மாற்றங்களைக் குறிப்பனவும் இதில் அடங்கும்.

3. முக்காலங்களுக்கும் பொதுவான நிகழ்வு, இயல்புகளைச் சுட்டுதல் [இம் மூன்று நோக்குகளிலும் சங்கர நமச்சிவாயர் குறிப்பிடும் இயற்கை வினைக்குறிப்பு ஆக்க வினைக் குறிப்பு (நன் 347) என்ற இரு பிரிவும் அடங்கும்.]

1. முன்பக்கங்களில் விளக்கம் தரப்பட்டுள்ளது.

2. பொதுவான நிலைகளை எவரும் பொருட்படுத்துவது இல்லை. எதிலும் அளவுக்குமிஞ்சியதும், எதிலும் அளவுக்குக் குறைந்ததும் கவனிக்கப்படுகின்றன. அனைவருக்கும் பல் உண்டு. அது கவனிப்பு அற்ற நிலை. எவன் ஒருவனுக்கு அளவுக்கு மிஞ்சி நீண்ட பல் காணப்படுகிறதோ அது கவனிப்பு நிலை. ஆகவே

'பல்லன்' என அழைக்கப்படுகிறான். இவ்வாறே வல்லன், புல்லன் என அமைவதும் காணலாம். மற்றவர்கள் பற்களிலும் பார்க்க நீண்ட பல் உடையவன் என்னும் தொடர் பல்லன் என்ற குறிப்பு வினையால் சுருக்கம் பெறுவதுடன் பொதுமை கடந்த நிலைப்பாட்டை யும் சுட்டிக் காட்டுகிறது.

இவ்வகையான குறிப்புவினைகள் அடைமொழி பெற்று ஆவதும் உண்டு. தூங்கு கையன், ஓங்கு நடையன், கடுநடையன், தாழ் செவியன் என ஆகும்.

3. முக்காலங்களுக்கும் பொதுவான நிகழ்வு இயல்புகளைச் சுட்டுதல்.

அ. "சோழவள நாடு சோறு உடைத்து"

ஆ. யானை குண்டு கட்டு (குழிந்த கண்ணை உடையது)

இ. "இது செயல் வேண்டும் என்னும் கிளவி
இருவயின் நிலையும் பொருட்டு ஆகும்மே
தன்பா லானும் பிறன்பா லானும்."

உடைத்து (உடையது), சுட்டு, பொருட்டு (பொருளை உடை யது) ஆகிய குறிப்பு வினைகள் முக்காலத்திற்கும் பொதுவான நிலை சுட்டி நிற்கின்றன. சோழவள நாட்டில் சோற்றுப்பஞ்சம் என்றும் இல்லை யானை என்றைக்குமே குழிந்த கண்ணை உடையது. 'இது செய்ய வேண்டும்' என்னும் தொடர் எக்காலமும் ஈரிடப்பொருளை உடையது எனக் குறிப்பு வினைகள் எமக்குத் தெரிவித்து நிற்கின்றன.

(3)

## குறிப்புவினை ஆக்கம்

1. தெரிநிலை வினைமுற்று வினையடி, கால இடைநிலை, பால்/எண் காட்டும் வினைவிகுதிகளை முறையே பெற்று ஆக்கம் உறு கின்றது. சிறுபான்மை கால எழுத்துகளைப் பெற்றுக்கொள்ளாமல் பகுதியும் விகுதியும் இணைந்து முடிவதும் உண்டு. ஊன்றி நோக்கி னால் அவ் விகுதிகள் கால எழுத்தோடு ஒன்றுகிவிட்ட தன்மையை அல்லது அவ் விகுதியே காலம் காட்டும் இயல்பை அறியலாம்.



தெரிநிலை வினைகள் ஒருகாலும் பெயரடிகளைக் கொண்டு ஆவ தில்லை. அவ்வாறு ஆவதெனக் கொண்டு காதலித்தான், சித்திரித் தான். கடைக்கணித்தான் ஆகியவை சான்றுகளாகக் காட்டப் பட்டு வருவது சரியற்றது. காதல், சித்திரம், கடைக்கண் என்ற பெயர்கள் தம் இயல்பான வடிவத்துடன் நின்று கால இடைநிலை, விகுதிகளைப் பெற்றுவிடவில்லை. இவை முன்னிலை ஏவல் ஒருமை இகர விகுதிகளைப் பெற்று ஏவல்வினைப் பகுதிகள் ஆன பிறகுதான் ஏனைய இலக்கணக் கூறுகளைக் கொண்டு தெரிநிலை வினைகள் ஆகின்றன.

காதல் — இ காதலி — காதலைச் செய்
சித்திரம் — இ சித்திரி — சித்திரத்தை எழுது
கடைக்கண்— இ கடைக்கணி — கடைக்கணித்தலை அருள்

வினைமுற்று வேற்றுமை ஏற்பதில்லை. வினையாலணையும் பெயரான பிற்பாடுதான் வேற்றுமை ஏற்கின்றது. இதே போலத்தான் பெயர்ச் சொல்லும் வினைப்பகுதி ஆகிய பின்னரே தெரிநிலை வினை முற்று ஆகின்றது. "வா" என்னும் வினையடியை வருதலைச் செய் என அகநிலைச் செயப்படுபொருள் கொண்டதாகப் பிரயோக விவேக நூலாரும் (காரிகை 12), 'உழு' என்னும் வினைப்பகுதியை உழு தலைச் செய் எனப் பரிமேலழகரும் (குறள் 14) விரித்துரைத்தார்கள். இவ்வாறே 'காதலி' என்பதையும் காதலைச்செய் என விரித்துக் கொள்ளுதல் வேண்டும். எந்த வகையிலும் பெயர்ச்சொல் தன் னியல்பில் நின்றபடி தெரிநிலை வினைமுற்று ஆவதில்லை. குறிப்பு வினையோ பெயரடியில் எவ்வித மாற்றமும் இன்றி அமைந்துவிடு கின்றது. காதல்—து > காதற்று, காதலை உடையது.

குறிப்புவினையோ பெயரடியாகப் பிறந்து பால்/எண் காட்டும் வினை ஈறுகளைக் கொண்டு முடிகிறது. ஆக, குறிப்புவினைக்கு இரு தளங்கள் மாத்திரம் உண்டு. குறிப்புவினைகள் பிறக்கும் பெய ரடிகளைத் தொல்காப்பியனார் இருவகைப்படுத்துவர். ஆறாம் வேற்றுமை உடைமைப் பொருள் காட்டும் பெயர், ஏழாம் வேற்றுமை நிலப்பொருள் தரும் பெயர், பண்புப் பெயர், ஒப்புமை கருதும்

பெயர்கள் ஒருவகை. அல், இல், உள், வல், நல் ஆகிய அடிச் சொற்கள் மறுவகை.

நன்னூலாரோ பொருள், இடம், காலம், சினை, குணம், தொழிற் பெயர்கள் அடியாகக் குறிப்புவினை தோற்றும் என்பர். பண்பு, தொழிற் பண்பு, குணப்பண்பு என இருவகைப்படுவதாலும் ஏழாம் வேற்றுமை காலப் பொருளிலும் வருவதாலும் கால வளர்ச்சி நோக்கி நன்னூலார் அறுவகைப்படுத்திக்கொண்டார். 'வினைக் குறிப்புச் சொற்கள் குணவிகற்பம் பலவாதலின் பலவிகற்பப்பட்டு வரும்' (நன். 321) எனத், தொல்காப்பியனுர் இரண்டாவது வகை யுள் அடக்கிய அவ் முதலானவற்றைப் பண்புள் அடக்குவர் தருக்க இயல் வல்லுநருமான சிவஞான முனிவர்.

பல வாய்பாடுபற்றி வருதல், ஒரே வாய்பாட்டில் வருதல் என்ற அடிப்படையில் தொல்காப்பியப் பகுப்பு நுட்பமானதே. கச்சினன். கழலினன், நாட்டினன் என 'அதுச்சொல் வேற்றுமை' உடைப்பொருள் கருதுவன வரும். அல் என்பதில் இருந்தோ அல்லன் அல்லன் என்றதுபோல ஒரே வாய்பாட்டிலேயே வரும். பால்/எண் காட்டும் வினை ஈறுகளால் பலவாதல், பல வாய்பாடு ஒரே வாய்பாடு என்ற பகுப்புக்கு அடிப்படை ஆகாது.

ii. உடன்பாட்டுக் குறிப்புவினைமுற்றுப் போல் எதிர்மறைக் குறிப்புவினைமுற்றும் பிறக்கும். கச்சிலன், பொன்னிலன் என வரும்.

iii. குறிப்புவினை அடிகள் பெயர்கள் ஆதலின் குறிப்புவினை யில் ஏவல் வினைகளோ, வியங்கோள் வினைகளோ ஆக முடியாது.

குறிப்புவினை முற்றும் தெரிநிலை வினைமுற்றுப்போல் சாரியை பெற்று வருவதும் உண்டு. பெற்றுக் கொள்ளாமல் வருவதும் உண்டு. தெரிநிலை வினைமுற்றுப் போல் எழுத்துப்பேறு பெறுவதும் உண்டு.

ஏற்புடைய சாரியைகள் இன், அன், இ, இய, அத்து என்பன வாம். தெரிநிலை வினைமுற்றுகள் இருதிணையிலும் அன் சாரியை மாத்திரம் பெறும் (வந்தனன், வந்தன) 'இன்' இறந்தகால இடை



நிலையாகத் தெரிநிலை வினைமுற்றில் வருதலின் (போயினன்) அதனை அடுத்து இன் சாரியை வரமுடியாது.

குறிப்புவினைமுற்றில் இன் அன் என்பன முறையே உயர்திணை அஃறிணைகளில் வருவனவாம் (கச்சினன், மெ(ல)லியன்) குறிப்பு வினைகள் அன் சாரியை பெறுவதில்லை எனத் தெரிவிக்கப்படும் கருத்து சரியற்றது. ஏனைய இ, இய, அத்து என்பன இருதிணை களுக்கும் பொதுவாக வரும்.

அ. சாரியை ஆற்ற ஆக்கம்

| | | | | |
|---|---|---|---|---|
| உள் | — | அன் | > | உளன் |
| உள் | — | அள் | > | உளள் |
| உள் | — | அர் | > | உளர் |
| உள் | — | து | > | உளது |
| உள் | — | அ | > | உள |
| கோடு | — | அன் | > | கோட்டன் |
| குழல் | — | அன் | > | குழலன் |
| நல் | — | து | > | நன்று |
| அல் | — | து | > | அன்று |
| இல் | — | து | > | இன்று |

ஆ. சாரியை பெற்ற ஆக்கம்

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| வில் | — | இன் | — | அன் | > | வில்லினன் |
| கச்சு | — | இன் | — | அன் | > | கச்சினன் |
| மெல் | — | இ | — | து | > | மெலிது |
| வல் | — | இ | — | து | > | வலிது |
| மெல் | — | இய | — | து | > | மெல்லியது |
| நுண் | — | இய | — | து | > | நுண்ணியது |

| | | | | |
|---|---|---|---|---|
| மெல் | — இ | — அன் அ | > | மெல்லியன் |
| பல்லியம் | — இ | — அத்து — அன் | > | பல்லியத்தன் (திருமுருகு: 209) |
| வல் | — இ | — அன் | > | வலியன் |

இ. எழுத்துப்பேறும் பெற்ற ஆக்கம்

அ — ற் — து > அற்று (அத்தன்மைத்து)
இல் — அ — த் — அ — து > இல்லாதது
இல் — ஆ — த் — அன் — அ > இல்லாதன
(ற் த் எழுத்துப் பேறுகள்)

**குறிப்புவினை — பெயர்வினை எச்சங்கள்**

| | |
|---|---|
| நற்சொல் | நல்ல சொல் |
| உள் பொருள் | உள்ள பொருள் |
| இல் பொருள் | இல்லாத பொருள் |
| | இல்லாப்பொருள் |
| தீச்சொல் | தீய சொல் |
| பெருமனிதன் | பெரிய மனிதன் |
| செம்மலர் | செவ்விய மலர் |
| | சிவந்த மலர் |

முதற் பிரிவில் அடிச்சொற்கள் பெயர்களுடன் இணைந்து பெயரடைகளாக உள்ளன. இரண்டாவது பிரிவில் அடிச்சொற்கள் பெயரெச்சம் குறிக்கும் அகர விகுதியுடன் நேராக இணைந்தும் சாரியை எழுத்துப்பேறு பெற்று இணைந்தும் குறிப்புவினைப் பெயரெச்சங்கள் ஆகின்றன.

வசதி **இன்றி** வாழ்வதா ?
வசதி **இல்லாது** வாழ்வதா ?
வசதி **இல்லாமல்** வாழ்வதா ?



அவன் **அன்றி** ஓரணுவும் அசையாது.
அவன் **அல்லாது** ஓரணுவும் அசையாது.
அவன் **அல்லாமல்** ஓரணுவும் அசையாது.

மேலே தடித்த எழுத்தில் உள்ளவை எதிர்மறைக் குறிப்புவினை எச்சங்கள். இவற்றை வினை அடைகள் என்று கூறிக்கொள்வாரும் உண்டு. கிளவி ஆக்கத்தில் 'அடைகள்' பற்றிக் குறிப்பிட்ட தொல்காப்பியனார் எழுத்ததிகாரத்தில் அன்றி, இன்றி என்பவற்றை 'அன்றி இன்றிஎன் வினை எஞ்சு இகரம்'' எனக் குறியீடு செய்து கொண்டதை ஆழ்ந்து நோக்குதல் வேண்டும். அடைமொழிகள் எனக் கருதிக்கொள்ளும் கருத்து தொல்காப்பியனாருக்கு உடன்பாடாயின் ''அன்றி இன்றி என் அடைமொழி இகரம்'' என நூற்பாவைச் செய்து இருக்கலாம். இவற்றை எச்சங்கள் என்பதே தொல்காப்பியனாரின் கருத்தென்று ஆகிறது.

(4)

குறிப்புவினைபற்றிய இலக்கணச் சிந்தனைகள் தெளிவாக இல்லையெனக் காலத்துக்குக் காலம் கூறப்பட்டுவருகிறது. இவற்றை ஏன் குறிப்புவினை எனல் வேண்டும்? இதில் அடங்கியுள்ள குறிப்புப் பொருள் என்ன? அல்லது குறிப்பாக அறியப்படுவது என்ன? இவற்றுக்கும் பெயர் தெரிநிலை வினைகளுக்கும் உள்ள வேறுபாடு என்ன என்ற கேள்விகள் எழச் செய்கின்றன. இக் கேள்விகள் தருக்க பூர்வமான விடைவேண்டி நிற்கின்றன. முதலில் குறிப்பு வினைபற்றிய தொல்காப்பியனார் கருத்து எது எனப் பார்க்கலாம்.

வினை இயல்புபற்றிக் குறிப்பிடும் தொல்காப்பியனார் எதிர்மறையாகவும் உடன்பாடாகவும் விளக்கம் தருகிறார். வினை வேற்றுமை கொள்வதில்லை எனக் கூறிக்கொள்வது எதிர்மறையான விளக்கம்; வினை காலமொடு தோற்றமென்பது உடன்பாடான விளக்கம். எது காலமொடு தோன்றவில்லையோ அது வினைச்சொல்லும் அன்று என்பது தொல்காப்பியனார் கருத்து எனக் கொள்ளுதல் வேண்டும். உடன்பாட்டு முறையில் வினைச்சொல் இயல்பு என்று குறிப்பிட்டது இந்த ஒன்றுதான். இந்த ஒரே ஓர் இயல்பை வைத்துக்கொண்டு

தான் குறிப்புவினையில் எது குறிப்பாக உள்ளது எனத் தீர்மானிப்பதே நியாயமானதாகும். ''நினையும் காலைக் காலமொடு தோன்றும்'' என்ற வினையியல் முதல் நூற்பாவின் அடிக்கு விளக்கம் தந்த சேனாவரையர் ''வினைச்சொல்லுள் வெளிப்படக் காலம் விளக்காதன வும் உள அவையும் ஆராயுங்கால் காலமுடைய என்றற்கு 'நினையுங் காலை' என்றார். அவை இவை என்பது முன்னர்ச் சூத்திரத்தால் பெறப்படும்'' என விளக்கம் தந்தார். முன்னர் சூத்திரம் என அவர் குறிப்பிடுவது.

''இறப்பின் நிகழ்வின் எதிர்வின் என்று
அம்முக் காலமும் குறிப்பொடும் கொள்ளும்
மெய்ந்நிலை உடைய தோன்றல் ஆறே''

என்பதாகும். பதவுரையின்பின், 'வெளிப்படக் காலம் விளக்காதன குறிப்புவினை என்பதும் பெற்றாம்' எனத் திட்டவட்டமாகக் குறிப்புரை எழுதினார். இளம்பூரண அடிகளும் இப்படியே குறிப்பு எழுதினார். ஏனைய உரையாளர்களும் இக் கருத்தை ஒரு முகமாக வெளிப்படுத்தினார்கள். குறிப்பாகக் காலம் காட்டுவது குறிப்புவினை என்பதே தொல்காப்பியர் கருத்து என உரையாளர்கள் அனைவரும் வெளிப்படுத்தியுள்ளனர். வெளிபபடையாகக் காலம் காட்டவில்லையெனில் அதனைக் குறிப்பாகத்தானே அறிதல் வேண்டும்? தொல்காப்பியர் வினைபற்றி உடன்பாட்டு முறையில் குறிபபிட்டது வினைச்சொல் காலம் காட்டும் என்ற ஒரே ஓர் இயல்புதான். அதை வைத்துக் கொண்டுதான் குறிப்பு எது எனத் தீர்மானிப்பதே முறையாகும். தொல்காப்பியனார் குறிப்பிடாதவற்றைக் குறிப்பு எது என அறிதற்கு எடுத்துக்கொள்வது தருக்கப் பிறழ்ச்சியாகும்.

வெளிப்படக் காலம் விளக்காதன குறிப்புவினை என்ற சேனாவரையர், குறிபபை அறிவதற்கான நெறியையும் குறிப்பிட்டார்.

வினைக்குறிப்புக் காலமொடு தோன்றுங்கால், பண்டு கரியன் இதுபொழுது கரியன் என இறந்தகாலமும் நிகழ் காலமும் முறையானே பற்றி வருதலும் நாளைக்கரியனாம் என எதிர்காலத்து ஆக்கமொடு வருதலும் அறிக.



வினைக்குறிப்பில் கால இடைநிலை இல்லை. அதனால் அது முக்காலத்துக்கும் பொதுவான நிலையைக் கொண்டது. இன்ன காலம் என அறிந்துகொள்வது குறிப்பிட்ட வாக்கியத்தின் அயல் சொற்களைப் பொறுத்ததாகும் என அறியவும் வைத்தார்.

வினையியல் 4ஆம் நூற்பா 'கரியன் செய்யன் என்புழித் தொழின்மை தெற்றென விளக்காது குறித்துக் கொள்ளப்படுதலின் குறிப்பு என்றார்' என்ற வாசகத்தை ஆதாரமாகக் கொண்டு 'தொழின்மை' என்பதற்குக் குறிப்புவினையில் குறிப்பாகக்கிடப்பது 'தொழின்மைப் பொருள்' எனக் கொள்வோரும் உண்டு : தொழில் தனமை 'தொழின்மை' என்ற மருவிய நிலையில் உள்ள கூட்டுப்பதம் தொழிலின் இயல்பு என்ற பொருள்தரும் அன்றி, தொழிற் பொருண்மை என அர்த்தம் செய்துகொள்வதற்கு இடம் தராது. காதல் தன்மை > காதன்மை, இவறல் தன்மை > இவறன்மை என்பன போன்ற அமைப்புக் கொண்டதே தொழின்மையும், தொழிலின் தன்மை என்ன? வினைக்குரிய இயல்பு எது என்று உடன் பாடாகக் கூறினார் தொல்காப்பியனார்? வினைக்குரிய இயல்பு காலம் காட்டுதல் என்றே நூற்பா செய்துள்ளார். பிறிதோரிடத்தில் (வினையியல் 16) 'தெற்றென விளக்கா ஆயினும் காலம் உடைய எனவேபடும்' என்றே சேனாவரையர் கூறுகின்றார். இக் கருத்தினையே கல்லாடனாரும் கொண்டுள்ளார். 'மெய்ந்நிலை என்பது வினைக்குறிப்பு காலத்தைத் தெற்றென விளக்கிக் காட்டாமையான் வினையல்ல என்று கருதினும் கருதற்க, இதுவும் வினையது இலக்கணம் மெய்ம்மையாக உடையது' (வினையியல் 3). தெளிவாக விளங்காதன எல்லாம் குறிப்புப் பொருள் என்று கருத வேண்டும் என்பதில்லை. குறிப்புப் பொருள் எடுத்த எடுப்பில் விளங்கக்கூடியது அல்ல என்று கொள்வதுடன் நின்றுவிட வேண்டும்.

குறிப்புவினைபற்றிச் சிந்திக்கும்பொழுது, தெரிநிலை வினையென்ற இலக்கணக் குறியீட்டின் பொருளையும் புரிந்துகொள்ளுதல் வேண்டும். தெரிநிலை வினையின் இயல்புதான் குறிப்புவினை என்னும் குறியீட்டுக்கு விளக்கம் தர வேண்டும். எது தெரிநிலை வினை? காலம் வெளிப்படையாகக் காட்டுவது தெரிநிலை வினையாகும்.

இது அனைவரும் ஒத்துக்கொண்ட விளக்கம் ஆகும். எனவே காலம் வெளிப்படையாக அறியமுடியாது. குறிப்பாக அறிய வேண்டுவது குறிப்புவினை என்றாகின்றது அல்லவா ?

மூன்று காலத்துக்கும் பொதுவாக நிற்கும் வினைக்குறிப்பு இன்ன காலம் காட்டுவது என அறிவது குறிப்பாகும் அன்றி, உள்ளடங்கி நிற்கும் ஒரு பொருளை அறிவது குறிப்பாகாது.

வினை காலம் அன்று. காலம் வினையும் அன்று. ஆனால் காலம் இன்றி வினை நிகழ்ச்சி இல்லை. ''அனைத்துச் செயல்களுக்கும் காலம் நிமித்த காரணம்'' என இந்திய தருக்க இயல் கூறுவதும் இவ்விடத்து அறிய வேண்டியதாகும். எல்லாவற்றுக்கும் பொதுமையாய் நிற்கின்ற நிலைதான் அதற்குள்ள முக்கியத்துவமும் ஆகும். அதனை அறிந்துகொள்வதே குறிப்பு எனத் தொல்காப்பியனார் கருதிக்கொள்வது வியப்புக்குரியதாகாது.

வினையைக் குறிப்பாக உடைமையின் வினைக்குறிப்பு என முதன்முதலாக ஒரு விளக்கம் அளித்தவர் மயிலைநாதரே (நன். மயி. 320). மயிலைநாதர் குறிப்பிட்ட 'வினை' வினைப் பொருண்மை அல்லது தொழிற் பொருண்மை என்ற பொருள் தருவதாயின் அது எந்த அளவுக்குச் சரியானது எனத் தெளிவுபடுத்தப்பட வேண்டும்.

'கச்சினன்' என்ற குறிப்புவினை கச்சைத் தனக்கு உடைமையாக்கிய செயலை உட்கொண்டு நிற்கிறது. 'இல்லத்தான்' என்பது இவ் விடயத்தைத் தனக்காக்கிக்கொண்ட தொழிலை மறைத்து வைத்துக்கொண்டுள்ளது என்று தொழிற் பொருண்மைகளை வெளிக் கொணரலாம். உள் அடங்கியன அல்லது உள்ளுக்குள் மறைத்து நின்றன எல்லாம் குறிப்பு ஆகுமா ? தொகைத் தொடர்களில் சில சொல்லும் பொருளும் உள்ளடங்கி மறைத்து நிற்கின்றன. இவற்றை வேற்றுமைக் குறிப்பு என்போமா ? தவிர, வேறு சில பெயர்களை எடுத்துக்கொள்வோம்.

அன்னை, எழிலி, பாரி, வள்ளி ஆகிய சில பெயர்களிலும் தொழிற்பொருண்மை உள்ளடங்கி நிற்கின்றன எனக் கொள்ளலாம். அன்பைத் தனக்கு உடைமையாக்கிக்கொண்டவள் அன்னை.



எழிலைத் தன்னுள் வளர்த்துக்கொண்டவள் எழிலி. பாராளும் தொழிலைத் தனக்காக்கிக் கொண்டவன் பாரி. வண்மைத் தொழிலை அல்லது வள்ளிக்கிழங்கில் நின்றும் பிறத்தலைத் தனக்காக்கிக் கொண்டவள் வள்ளி. இவ்வாறு அறிந்து கொள்ளக்கூடிய தொழிற் பொருண்மைகளைக் கொண்ட பெயர்களையும் குறிப்புவினைகள் எனலாமா ? கொள்ளுவது மிகைபடக் கூறல் (அதிவியாத்தி) ஆகாதா ? ஆகவேதான் காலம் தவிர வினைப் பொருண்மையையும் குறிப்பாக உடையது குறிப்புவினை என்ற கருத்து ஏற்கக்கூடியதன்று. ஒட்டு மொத்தமாகப் பார்த்தால் காலத்தைக் குறிப்பாக உடையது குறிப்புவினை என்ற கருத்தே மேலோங்கி நிற்கிறது.

பெயர்கள் வேறு. குறிப்புவினைமுற்றுகள் வேறு. ஐம்பால் மூவிட வினை ஈறுகளைக் கொண்டு முடிவன குறிப்புவினை முற்றுகள் ஆகும். இவ் வினைஈறுகளே அடிச்சொல்லாக வரும் பெயரை வினைப்படுத்துகின்றன. சில வினைஈறுகள் பெயர்களுக்கும் வருதல் உண்டு. அது கொண்டு பெயர்களும் குறிப்புவினைகளும் ஒன்று எனக் கூறமுடியாது. ஆங்கிலம் பேசுபவர் அனைவரும் ஆங்கிலேயர் அல்லர். பயனிலைகளாக வரும் பெயர்கள் குறிப்புவினைமுற்றுகள் ஆகும் எனத் தெரிவிக்கப்படும் கருத்து தவறானது குறிப்புவினைச் சொற்பரப்பு முழுவதையும் சீர்தூக்கிப் பார்க்காமையால் ஏற்பட்ட முடிவு அது. அஃறிணைக் குறிப்புவினைமுற்றுகளையும் நோக்கி ஆய்வு நிகழ்த்தியிருப்பின் அவ்வாறான ஒரு முடிவு ஏற்பட்டிருக்காது. நண்பன் அன்பன் முதலாக சில குறிப்புவினைகள், குறிப்பு வினை, வினையாலணையும் பெயராக நின்று காலவட்டத்தில் பெயர்கள் எனக் கொள்ளப்பட்டுவிட்டன எனக் கருத இடமுண்டு. 'ரிஷிமூலம்' ஆராயப்பட வேண்டியதே. சந்தர்ப்பம் வாய்க்கும்போது பெயர், குறிப்புவினை என்பனபற்றி விரிவாக ஆராயப்படும்.

**மேற்கோள்**


1. Fr. Beschi. A Grammar of the Tamil Language, 1974. P. 53.
2. விவேகானந்தர் சம்பாஷணைகள் 1972 பக். 120 (இராமகிருஷ்ண வெளியீடு, மயிலாப்பூர்).
3. தருக்கசங்கிரகம் மூலமும் உரையும் 1967 பக். 26 (ஆறுமுகநாவலர், வி. அ. சென்னை).

# 7. தன்வினை, இயக்குவினை, பிறவினை

தன்வினை, பிறவினைபற்றிய இலக்கண இயல்புகள், அவற்றை உள்ளடக்கி நிற்கும் பொதுநிலைகள் வரைவிலக்கணங்கள் தெளிவற்ற முறையில் காணப்படுகின்றன என்ற ஒரு குறைபாடு உண்டு. எனவே அவற்றை மீளாய்வுக்கு உட்படுத்துவது இக் கட்டுரையின் நோக்கமாகும்.

வரைவிலக்கணங்களை வைத்துக்கொண்டு சான்றுகள் தேடிக் கொள்ளாமல், சான்றுகளை வரலாற்று முறையாக வகைப்படுத்திக் கொண்டு இவ் இருவினைகள்பற்றிய இலக்கணங்களை வரைவு செய்வதே பொருத்தமானதாகும்.

முதலில் தொல்காப்பியர் காலத்திலும் அதற்குச் சற்று முன்னும் பின்னும் எவ்வாறு பிறவினை இயல்புகள் வெளிப்படுத்தப் பட்டுள்ளன என்று அறிய முயலவேண்டும். தொல்காப்பியத்தில் நான்கு வகைப்பாடான பிறவினை ஆக்க முயற்சியைச் சொற்பிரயோக நிலையில் வைத்து அவதானிக்கலாம். இங்கே பிறவினை எனக் குறிப்பிடுவது மரபுமரபாகச் சொல்லப்பட்டு வருவனவற்றையே ஆகும்.

1. ஒலி அழுத்தம் (Accent) மூலம் பிறவினைப் படுவன.
2. தன்வினைப் பகுதியின் ஓசை நீட்டம்—அளபெடை மூலம் பிறவினைப் படுவன.
3. தனிவினைப் பகுதியின் ஒலிப்பை வன்மைப்படுத்தும் வல்லின எழுததுகளைக் கொண்ட வினைவடிவங்கள் மூலம் பிறவினை காணல்.



4. வினைப்பகுதி எதிர்காலப் பகரமெய்யுடன் இணைந்த முன்னிலை இகரவிகுதி (பி) பெற்றுப் பிறவினையாதல் இதுவே இறுதி முயற்சியானதாகவும் காணப்படுகிறது.

1. ஒலி அழுத்தம் :

"உப்ப காரம் ஒன்று என மொழிப
இருவயின் நிலையும் பொருட்டுஆ கும்மே" (தொல். 76)

உகரத்தை இறுதியாகக் கொண்டுவரும் ஈரெழுத்தாலாகிய ஒரேஒரு சொல் 'தபு' என்பதே. இது ஈரிட நிலையிலும் பொருளை உடையதாகும் என நூற்பா குறிப்பிடுகின்றது. ஈரிடம் தன்வினை பிறவினை எனக் குறிப்பிட்டார் தொல்காப்பியத்தின் முதல் உரையாளரான இளம்பூரண அடிகள். தமிழ் இலக்கண உலகில் இக்குறியீடுகளை முதல் முதலாகக் கையாண்டவரும் அடிகளே ஆவர்.

தபு என உதாரணம் காட்டி அதனை மெத்தனமாக உச்சரிக்க (படுத்தல் ஓசை) 'நீசா' எனத் தன்வினையாம். உரத்து வன்மைப் படுத்தி உச்சரிக்க (எடுத்தல் ஓசை) 'நீ ஒன்றினைச் சாவி' எனப் பிறவினையாம் என்று விளக்கமும் தந்தார். அடிகளாரின் விளக்கத்திலிருந்து ஒரு தொழிலைத் தான் (எழுவாயாக நிற்கும் பொருள்) செய்வது தன்வினை என்றும் பிறரைக் கொண்டு செய்விப்பது பிறவினை என்றும் ஆகிறது. 17 ஆம் நூற்றுண்டைச் சார்ந்தவரான பிரயோக விவேக நூலாசிரியரும் தபு என்னும் வார்த்தையை ஓசை வேறுபாட்டால் கெடு எனவும், கெடுவி எனவும் தன்வினை, பிறவினைகளுக்கு முறையே சான்றுகாட்டி (காரிகை 40) உரையாசிரியர் கருத்தை உறுதிப்படுத்திக்கொண்டார்.

ஆனல், நச்சினர்க்கினியரோ தபு என்பதைப் படுத்தல் ஓசையால் உச்சரிக்க 'நீசா' எனத் தன்வினை ஆகும் என்றும், எடுத்தலோசையால் உச்சரிக்க நீர் ஒன்றனைச் சாவப்பண் (சாகச்செய்) எனப் பிறவினை ஆகும் என்றும் மேலே குறிப்பிட்ட நூற்பாவுக்கு உரை கண்டார். துணைவினை சேர்ந்துள்ள 'சாவப்பண்' எனச் சான்று காட்டியதன் மூலம் பிறவினைபற்றிய 'விசாலிப்புக்கு' இடம் தந்து

விட்டார் நச்சினார்க்கினியர் எனக் கருதலாம். சாகப்பண் என்னும் முன்னிலை ஏவல்வினை, நீயாகச் சாகச் செய்யலாம், இன்னொரு வரைக் கொண்டு சாகவும் செய்யலாம் என்ற இருவித கருத்து களையும் உள்ளடக்கி நிற்பதைப் புரிந்து கொள்ள முடியும். நச்சினார்க் கினியர் நிலை வீரசோழியத்தின் தாக்கம் ஆகலாம்.

## 11. ஓசை நீட்டம் அல்லது அளபெடை

அ. *''நீட்டம் வேண்டின் அவ்வளவு உடைய*
*கூட்டி எழூஉதல் என்மனார் புலவர்''* **(தொல். 6)**

*எழூஉதல்—எழூஉக* **(இளம்பூரணர்)**

*எழூஉதல்—எழுப்புக* **(நச்சினார்க்கினியர்)**

ஒலி அழுத்தம் தவிர, ஓசை நீட்டம் காரணமாக எழுதல் எழூஉதல் எனப் பிறவினை ஆகியது எனக் கருதலாம்.

'ஆனால், 'எழு' தன்வினை எனவும் 'எழூ' பிறவினை எனவும் குறிப்பிட்டு', மேலும் எழூஉ என்பது எழுஉ என்பவற்றாலாய சொல் முதனிலையின் (எழு) உகரத்தோடு பிறவினைப் பொருளில்,[1] வந்த உகரம் சேர்ந்து ஊகாரமாகி எழூ என்றாயிற்று என விளக்கமும் தரப்பட்டுள்ளது. உகரம் பிறவினை விகுதியா இல்லையா என்பது வேறு சிந்தனை. ஆனால் இங்கே எழூ என்பதை அடுத்து நிற்கும் உகரம் அது ஓர் அளபெடைச் சொல் என்றே இனம் காட்டு கின்றது

மேற்படி விளக்கத்திற்கு ஆதாரமாகக் காட்டப்பட்டன பொருத்த மானவை எனக் கருதமுடியவில்லை.

1. இரு குறில் உயிர்கள் இணைந்து ஒரு நெடில் ஆவதில்லை. ஆகும் எனில் உயிர் நெட்டெழுத்து வடிவம் என வேறு வேண்டிய தில்லை (இதுவும் எழுத்துச் சீர்திருத்தத்தின் பாற்பட்டுவிடும்) ஒரு மாத்திரை கூடிய நீண்ட ஓசையே நெட்டெழுத்து ஆகும்.



2. செய்யுளில் ஓசை குறையும் பொழுதும் அளபெடை எழ லாம், சீர்தளை சிதைந்த இடத்தும் எழலாம், இன்னோசைக்காகவும் எழலாம். உரைநடையிற்கூட குன்று முட்டிய குரீஇ எனவும் 'அல்லதூஉம்' எனவும் ஓசை இன்பம் கருதி அளபெடைகள் வந்த தையும் அறிவோம்.

3. தழூ, குழூ என்பவற்றை ஊகார இறுதி வினைச்சொற்கள் என எவரும் பிழைபடக் கருதிவிட மாட்டார்கள். ஊகார இறுதி வினைப்பகுதிகள் ஓரெழுத்தால் அமைவதன்றி இரு எழுத்துகளால் ஆவதில்லை.

4. தழூ உ தழுவு என உடம்படுமெய் பெற்றுவரும். அது இக் கால வழக்கு எனச் சொல்லப்பட்டது. இதுவும் சரியற்றது. 'தழுவு' எனக் குறுந்தொகையில் வருகின்றது (294 : 2) இன்ன பல இடங்கள் உண்டு. வழுவமைதி (வழுவு அமைதி) இக்கால வழக்கா ?

5. மகார் என்ற சொல் மகா அர் என அளபெடை பெற்றும் பத்துப்பாட்டில் ஈரிடங்களிற் காணப்படுகின்றது. (3;56, 10:339) இவ் விடங்களில் மகார் என நிற்பதால் ஓரசையாகும் சிதைவைத் தடுப்பதற்காக அளபெடை பெற்று மகாஅர் என நிற்கின்றது.

எனவே எழூ என்பது பிறவினை எனக் கொள்வது பொருத்தம் அற்றதாகும். அளபெடை மூலம் பிறவினை எனக் கருதப்படலாம் என்பதே இலக்கண மரபுச் சிந்தனைகளுக்கு ஒத்ததாகும். இலக் கணக்கொத்து ஆசிரியரும் இவ்வகை அளபெடையைக் குற்றெழுத் தளபெடை (90) எனக் கூறுவது தெரிந்ததே.

ஆ. *''சிறுசொற் சொல்லிய சினங்கெழு வேந்தரை*
*அருஞ்சமம் சிதையத் தாக்கி முரசமொடு*
*ஒருங்கு அகப்படேஎன் ஆயின்''* **(புறம். 72)**

'அகப்படேஎன்' என்பதற்கு கைக்கொண்டிலேன் எனப் பொரு ளுரைத்து ''அகப்படேஎன் ஆயின் என்றது ஈண்டுப் பிறவினைமேல் நின்றது'' எனக் குறிப்புரைத்துள்ளார் புறநானூற்றுப் பழைய உரையாசிரியர்.

இ. "துன்புறூஉம் துவ்வாமை இல்லாகும் யார்மாட்டும்
இன்புறூஉம் இன்சொ லவர்க்கு" (குறள் 94)

உம் எனவரும் ஈரிடங்களிலும் மிகுவிக்கும் எனப் பரிமேலழகர் பிற வினையாகப் பொருளுரைப்பர். 'மிகுக்கும்' என அவர் பிறவினை யாக்கிப் பொருளுரைத்துக் கொள்ளவில்லை என்பதை இங்கும் கவனித்துக் கொள்ளுவோம்.

**111. வினைப்பகுதியை வல்லின எழுத்துகளைக் கொண்டு வல்லோசைப் படுத்தல்**

| | | |
|---|---|---|
| (அ) | ஒழுகு ஒழுக்கு—'ஒழுக்கல்' | (தொல் 112) |
| | நாடு நாட்டு—'நாட்டல்' | (தொல் 886) |
| (ஆ) | போ போக்கு—'போக்கல்' | (தொல் 985) |
| | புணர் புணர்த்து—புணர்த்து | (தொல் 986) |
| (இ) | மயங்கு மயக்கு—'மயக்குறுதல்' | (தொல் 958) |
| | நீங்கு நீக்கு—நீக்கல் | (தொல் 986) |
| (ஈ) | மெலிதல் 'மெலித்தல்' | (தொல் 886) |
| | விரிதல் 'விரித்தல்' | (தொல் 886) |
| | தொகுதல் 'தொகுத்தல்' | (தொல் 886) |
| | மறைந்தனர் 'மறைத்தனர்' | (தொல் 925) |

**4. பிறவினை விகுதி பெறுதல்.**

பி/வி, பிவி, விபி என்பவற்றைத் தன்வினைப்பகுதியுடன் இணைத்துப் பிறவினை ஆக்கும் முயற்சியில் 'அம்ம கேட்பிக்கும்' என்ற ஒரு பிரயோக நிலையைத் தொல்காப்பியத்தில் (761) காண்கிறோம். (கேள் பி-கேட்பி)

மேற்கூறப்பட்ட நான்குவகைப் பாகுபாடுகளில் முதலாவதான பிறவினை ஆக்கம் இன்றும் பேச்சுமொழியில் பேசும் தொனியால் அவதானிக்கக்கூடியதாக உள்ளது.



இரண்டாவது வகை இருவகை வழக்கிலும் அருகிவிட்டது.

மூன்றாவது வகை ஆய்வுக்கு உள்ளாக்கப்பட வேண்டியதாக வுள்ளது. இம் மூன்று வகையையும் நுண்ணிதாக நோக்கும்பொழுது செயப்படுபொருள் குன்றிய வினை அடிகளைச் செயப்படுபொருள் குன்றாத வினைஅடிகளாக மாற்றுவதற்கான முயற்சிகள் என்பது புலப்படாதிருக்க முடியாது.

நான்காவது பிரிவிற் கூறப்படும் அமைப்பு மாத்திரம் நன்னூலா ரால் விதியாக்கப்பட்டும் விட்டது. தொல்காப்பியத்தில் காணப்படும் விதிமூலம் (உடம்பொடு புணர்த்தலான பிரயோகநிலை அமைப்பு) நன்னூலில் விதியாகிவிட்டது.

**(2)**

தொல்காப்பியம் பிரயோகநிலையில் பிறவினை விகுதியாக 'பி' என்பதனைக் குறிப்பிட்டுள்ளது. 'பி' விகுதியின் மாற்று வடிவமாக சங்க இலக்கியங்களில் (எல்லாவற்றிலும் அல்ல) 'வி' என்பதும் நுழைந்து கொண்டது. அதுவும் சங்க இலக்கியங்களில் பிற்பட்டன எனக் கருதப்படும் கலித்தொகை பரிபாடலில் ஒவ்வோர் இடம் கண்டு. பதிற்றுப்பத்து பதிகத்திலும் ஓரிடம் பெற்றது. அடுத்து காரைக்கால் அம்மையாரின் அற்புதத் திருவந்தாதியில் காண் கிறோம். மீண்டும் சம்பந்தர் தேவாரத்தில் பார்க்கிறோம். பக்தி இலக்கியங்களிலும் அதன் பிற்பாடும் 'வி' பிறவினை விகுதியாகிப் பெருவாழ்வு பெற்றுவிட்டதைக் காண்கிறோம்.

(1) "கொடுப்பித்து" (பதிற்றுப்பத்து 6ஆம் பத்து-பதிகம்)
(2) "பிறப்பித்தோரிலையே" (பரி 3 : 72)
(3) "அறிவிப்பான் தானே" (அற்புதத் திருவந்தாதி 20)
(4) "அருகுவித்து" (கலி 142 : 2)
(5) "தோற்றுவித்த திருத்தோணி புரத்தீசன்"
(சம்பந்தர் தேவாரம்)

இவ்வகையாக பி/வி பிறவினை விகுதிகளாகக் காலகட்டத்தில் பல்கிப் பெருகிவிட்டன. தனிவினைப் பகுதி பி/வி பெற்றுப் பிறவினை ஆகும்

அன்றி பி/வி பெற்றன எல்லாம் பிறவினைப் பகுதிகள் ஆகா என்பதையும் கருத்திருத்துவோம்.

(3)

தொல்காப்பியத்தின்பின் இலக்கண அடிப்படையில் பிறவினை வடிவங்கள்பற்றிக் குறிப்பிட்ட நூல் வீரசோழியம் ஆகும். (காரிகை, 65) பிறவினை என்னும் இலக்கணக் குறியீட்டுக்கு மாற்றாக 'காரிதம்' என்னும் வடமொழிக் குறியீட்டைக் கையாண்டது. வீரசோழியம் காரிதம் - பிறவினைச் சான்றுகளைத் தந்து இவை காரிதம் ஆகும் எனக் குறிப்பிட்ட வீரசோழியம் பிறவினை என்பதற்கு எவ்வித விளக்கமும் அளிக்கத் தவறிவிட்டது. வீரசோழியம் கூறும் பிறவினைப் பகுதிகள்:

1. ஆட்டு, ஆற்று, தீற்று ஆகியன—தனிக்காரிதத்தாது
2. ஆட்டுவி, ஆற்றுவி, தீற்றுவி —காரிதம் காரிதத்தாது
3. ஆட்டுவிப்பி, ஆற்றுவிப்பி, தீற்றுவிப்பி—காரிதக்காரிதக் காரிதத்தாது

தன்வினைப்பகுதியின் பின், வி/பி சேர்வதால் பிறவினை ஆகுமென வீரசோழியம் குறிப்பிடவில்லை. வீரசோழியம் குறிப்பிடும் ஆட்டு, ஆற்று ஆதியானவை பிறவினைப் பகுதிகளா என்று கேள்வி எழுவது மரபுநோக்கிய சிந்தனையில் நியாயமானதே. ஆட்டு, ஆற்று முதலானவை (விகாரப்பட்ட பகுதிகள்) வேறு வேறு வினை நிகழ்ச்சிகளைக் குறிப்பிடும் வினைப்பகுதிகள் எனக் கொள்வது பொருத்தம் ஆகலாம். தின்னல் ஒரு தொழில், தீற்றல் இன்னொரு தொழில், ஆடுதல் ஒருவினை, ஆட்டுதல் மற்றொருவினை, ஆறுதல் ஒரு செயல், ஆற்றுதல் மற்றொரு செயல். வேறு வேறான இவ்விரு தொழில்களும் தன்வினைகளாக நிகழக்கூடியனவே. முதல் வகையின ஒரு வினைமுதல் தானே இயங்கும் வினையைக் குறிப்பிடுவன ஆகும். இரண்டாவது வகையில் அதே வினைமுதல் ஏனையவற்றை இயக்கும் வினைகளைக் குறிப்பிடுவன ஆகும். இவையும் வி/பி சேர்ந்த பிற்பாடுதான் முதன் முதல் தன்வினை பிறவினைகளுக்கு விளக்கம் தந்த இளம்பூரண அடிகள் கருத்துப்படி, பிறவினைப் பகுதிகள் ஆகும், பிறவினை விகுதிகள் சேராத ஆட்டு, ஆற்று, தீற்று என்பவற்றை வீரசோழிய ஆசிரியர் பிறவினைப் பகுதிகள் என்றதனாலேதான் பின்வந்த



இலக்கண இலக்கிய உரையாளர்கள் இவற்றைப் பிறவினை எனக் குறிப்பிட்டனர் போலும் என எண்ணக்கிடக்கிறது.

ஆற்று தீற்று முதலான விகாரப்பட்ட வினைப்பகுதிகளுடன் வி/பி சேரும் அமைப்பைக் காரிதக் காரிதம் எனக் குறியீடு செய்து கொள்ளுகிறார் வீரசோழிய ஆசிரியர். வடமொழி இலக்கண முத்திரை குத்தப்பட்ட இடங்களுக்குள் பிறவினையும் அகப்பட்டுக் கொண்டது.

(4)

வீரசோழியத்திற்குப் பின்பு எழுந்த நன்னூல் 'அம்ம கேட்பிக்கும்' என்ற தொல்காப்பிய நூற்பாவை விதிமூலமாகக் கொண்டு இளம்பூரண அடிகள் குறிப்பிட்ட தன்வினை பிற வினைகளுக்கிடையேயுள்ள வேறுபாட்டினை இனம் கண்டு, தமிழ் இலக்கணக் கோட்பாடுகளைத் தெளிவாகப் புரிந்துகொண்டு, வடமொழி தமிழ்மொழி ஒப்பு நோக்குக் குழப்பங்கள் ஏற்படுத்தாமல் பிறவினைப் பகுதிகள்பற்றிய தெளிவான நிலைப்பாட்டை உணர்ந்து விதி செய்துகொண்டது.

''செய்என் வினைவழி விப்பி தனி வரின்
செய்வி என் 'ஏவல்' இணையின் ஈரேவல்' (நன். சங், 138)

பிறவினை என்பதற்கு நன்னூலார் கையாண்ட இலக்கணக் குறியீடு ஏவல் என்பதாகும். இதனை இலக்கணக் கொத்து ஆசிரியரும் உறுதிப்படுத்திக்கொண்டார். (71)

எந்த வினைப்பகுதியும் வி அல்லது பி விகுதியைத் தனித்தனியாகப் பெற்றும் பிறவினைப்பகுதி ஆகாவிட்டால் இரண்டையும் கூட்டாகப் பெற்றுப் பிறவினைப் பகுதிகள் ஆக வேண்டுமென்பதும் அவர் கருத்தாகும். 'தனிவரினும்' என்பதிலுள்ள உம்மை (தொக்கு நிற்கிறது) கூட்டாகவும் என்ற பொருளையும் உட்கொண்டது. சான்று கல்—பி. கற்பி—கற்பிக்கிறான். இது ஒரு பிறவினைச் சொல் அன்று. கற்பிக்கின்றான் (கற்பிக்கச் செய்கின்றான்) இது பிறவினை ஆகும். இதனாலேதான் பி, வி என்பன தனித்தனியாகவும் கூட்டாகவும் எனப் பொருள் கொள்ளப்பட்டது. இக் கருத்து இலக்கணக் கொத்து ஆசிரியரால் தெளிவாக்கப்பட்டுள்ளது.

"முதல்நிலை திரிந்தும் திரியா தாகியும்
இருவகை ஆகிய இவ்வினை யீற்றின்
வி—பி இணைந்தும் வெவ்வேறு அணைந்தும்
இயன்று எண் வகையாம் பிறவினை என்ப
இயன்று எண் வகையாம் செய்வி என் ஏவல்"
(எனப்பாடம் ஓதுதலும் ஒன்று)—71

**முதல்நிலை திரிந்தவை**—செயப்படு பொருள் குன்றிய வினைப் பகுதிகள் குன்றாத வினைப்பகுதிகள் ஆக்கப்பட்டவை.

**முதல்நிலை திரியாதன**—செய்பொருள் குன்றாத இயல்பான வினைப்பகுதிகள்

**வி. பி. இணைதல்**—இரண்டும் கூட்டாகப் பிறவினை விகுதி ஆதல்.

**வேறுவேறு அணைதல்**—வி அல்லது பி தனித்தனியாகப் பிறவினை விகுதியாதல்.

நன்னூலார் கருத்துப்படியும் இலக்கணக் கொத்து ஆசிரியர், பிரயோக விவேக ஆசிரியர் மூல நூற்பாக்களின்படியும் ஒரு வினையைத் தான் செய்தல், தன்வினை எனவும் பிறரைக் கொண்டு செய்வித்தல் பிறவினை எனவும் ஆகின்றது. உரையாசிரியர் கருத்தும் இது என முன்னரே கண்டுள்ளோம்.

இயல்பாகவோ அல்லது திரிபடைந்தோ உள்ள எந்த வினைப் பகுதியும் பி/வி, பிவி என்னும் விகுதிகளில் ஒன்றுடன் இணைந்து கொண்ட பிற்பாடுதான் அது பிறவினைப் பகுதியாகின்றதெனவும் கவனித்திருக்கிறோம். ஒரு செயப்படுபொருள் குன்றிய வினைப் பகுதி பிறவினைப் பகுதி ஆதற்கு நிச்சயமாகச் செயப்படு பொருள் குன்றாத பகுதியாகித்தான் பிறவினை விகுதி ஏற்க வேண்டும் என்றில்லை. பிறவினை விகுதியை ஏற்றுக் கொள்ளவே அது செயப்படு பொருள் குன்றாத வினைப்பகுதியும் ஆகிவிடுகிறது.



சான்று : நட —பி = நடப்பி
கிட —பி = கிடப்பி
வா —வி = வருவி

முன்னிலை ஏவல் ஒருமைச்சொல் போலும் முதல்நிலைகள் இன்னிலைத்தாது பகுதி என்றும், செப்பு இளமுலையாய் அந்நிலைத் தாது சகன்மனத்தோடும் அகன்மகமாய், பின்னிலை வி—பி வரின், காரிதம் எனப் பேர்பெறுமே (33)

சகன்மகம் — செயப்படுபொருள் குன்றாவினை
அகன்மகம் — செயப்படுபொருள் குன்றியவினை
காரிதம் — பிறவினை

மேற்படி வியோக விவேக நூற்பா மிகத் தெளிவாக முன்னர்க் குறிப்பிட்ட கருத்துகளை வெளிப்படுத்துவது காணலாம்.

(5)

பிறவினை விகுதிகள் ஆன பி, வி என்பவற்றில் இகர விகுதி பிறவினையைக் குறிக்க பகர மெய்யும் வகர மெய்யும் எதிர்கால இடைநிலைகளாகின்றன. இவற்றில் ஒலித்துணையாக வந்து தோன்றின எனக் குறிப்பிடுதல் தேவையற்றது.[2] இயல்பான தன்வினைப்பகுதி 'செய் என்' ஏவல் எதிர்காலம் காட்டுவதுபோல் 'செய்வி என்' ஏவலும் எதிர்காலம் காட்டுவது உண்மைநிலைக்கு இசைவான தாகும். நச்சினார்க்கினியர் ஏலவே, இதனைச் சரியாகக் குறிப்பிட்டுள்ளார்.

"முற்காட்டிய முன்னிலை ஏவல் ஒருமை முற்றுகள் ஒருவனை நோக்கி, ஒன்றனை ஒரு தொழிலைச் செய்வி என்னும் பொருண்மைக் கண் நடத்துவி, நடப்பி, வருவி, விரிவி, விருப்பி, ஈப்பி, கொடுப்பி, கடவுவி, மேவுவி, கைப்பி, நொவ்வுரி, போக்குவி, வெளவுவி, உரிநுவி, மண்ணுவி, பொருநுவி, திரிமுரி, தின்பி, தேய்ப்பி, பார்ப்பி, செலுத்துவி, தெவ்வுவி, தாழ்த்துவி, கொள்ளுவி, வெஃகுவி என எதிர்காலத்திற்கு உரிய வகரமும் பகரமும் முன்னிலைக்கு உரிய

இகரம் ஏறி இடைநிலைக்கு உரிய எழுத்துகளும் பெற்று எடுத்த லோசையான் நிற்குமென்று உணர்க" (தொல். சொல். நச். 226)

நச்சினார்க்கினியர் குறிப்பிடும் பந்தியில் இருந்து இன்னுமொரு உண்மையையும் கண்டுகொள்ளுதல் வேண்டும். நடத்து, போக்கு, செலுத்து, தாழ்த்து என இக்காலத்துப் பிறவினைப் பகுதிகள் எனக் குறிப்பிடுவன முறையே நடத்துவி, போக்குவி, செலுத்துவி, தாழ்த்துவி எனப் பிறவினைவிகுதி கொடுத்தே நச்சினார்க்கினியரால் காட்டப்பட்டுள்ளன என்பதே அது.

(6)

இன்றைய இலக்கண அறிஞர்களும் மொழியியலாளர்களும் பிறவினைப் பகுதிகள் எனக் குறிப்பிடுவனவற்றை இனி, ஒரே பார்வையில் ஒட்டுமொத்தமாகப் பார்ப்போம்.

### பிறவினை ஆக்கம்

(அ) **இயல்பான வினைமூலத்துடன் பி/வி இணைதல் :**

செய் — வி = செய்வி

செய் — விபி = செய்விப்பி

காண் — பி = காண்பி

காண் — பிபி = காண்பிப்பி

செய் — வி — என் = செய்வியென் (பேச்சுமொழி)

காண் — பி — என் = காண்பியென் ( ,, )

ஆ) **துணைவினை பெறுதல் :**

படி — படிக்கச்செய்

வா — வரப்பண்ணு

போ — போகச்சொல்



2. குளி — குளிப்பாட்டு

சா — சாக்காட்டு

வா — வரக்காட்டு

நில் — நிற்பாட்டு

(இ) **வினைப்பகுதியின் ஈற்று வல்லினம் இரட்டித்தல் :**

| | |
|---|---|
| பழகு | பழக்கு |
| உருகு | உருக்கு |
| தேறு | தேற்று |
| வாடு | வாட்டு |
| சூடு | சூட்டு |

(ஈ) **வினைமூலத்தில் உள்ள மெல்லொற்று வல்லொற்றுதல் :**

| | |
|---|---|
| அடங்கு | அடக்கு |
| நீங்கு | நீக்கு |
| திரும்பு | திருப்பு |
| எழும்பு | எழுப்பு |
| வருந்து | வருத்து |
| திருந்து | திருத்து |

(உ) **கு சு டு து பு று என்னும் எழுத்துகளில் ஒன்று பகுதியுடன் இணைவது :**

| | |
|---|---|
| போ—கு | போக்கு |
| காய்—சு | காய்ச்சு |
| மருள்—டு | மருட்டு |
| நட—து | நடத்து |
| தின்—து | திற்று |
| காண்—து | காட்டு |
| எழு—பு | எழுப்பு |
| துயில்—று | துயிற்று |

(ஊ) வினைப்பகுதிக்கும் கால இடைநிலைக்குமிடையில் வல்லொற்று மிகுதல் :

| | |
|---|---|
| வளர்—கிறேன் | வளர்க்கிறேன் |
| அழி—கிறேன் | அழிக்கிறேன் |

மேற்படி பிரிவுகளில் (அ) பிரிவு தவிர ஏனையன இயல்பான வினைப் பகுதிகள் விகாரப்பட்ட நிலையில் உள்ளன. இவைகள் எல்லாம் செயப்படுபொருள் குன்றிய பகுதிகள் அல்ல. புள்ளடி இட்டவை செயப்படுபொருள் குன்ருத வினை மூலங்கள். இவையும் விகாரப் பட்டுள்ளன. இவ் வினைப்பகுதிகள் வேறுவேருன வினைகளைக் குறிப் பிடுகின்றன.

| அ | ஆ |
|---|---|
| படித்தல் | படிக்கச்செய்தல் |
| குளித்தல் | குளிப்பாட்டுதல் |
| பழகுதல் | பழக்குதல் |
| வருந்துதல் | வருத்துதல் |
| காணல் | காட்டல் |
| மெலிதல் | மெலித்தல் |

மேற்காட்டப்பட்ட பட்டியலில் (அ) பிரிவு தவிர ஏனையவை தான் (வினைமுதல் அல்லது எழுவாய்) ஒரு தொழிலுக்கு இடமாவதையும், ஏனையவற்றை அத் தொழிலுக்கு இடமாக்குவதையும் சுட்டுவதாக உள்ளன. வேறுவிதமாகச் சொன்னுல் ஓர் இயல்பான வினைப்பகுதி குறிப்பிடும் வினை அவ்வினை செய்பவனைத் தனக்காக்கிக் கொள்கிறது. துணை வினை பெற்ற அல்லது விகாரப்பட்ட வினைப்பகுதி பிறி தொன்றனைத தனக்காக்கிக கொள்கிறது. எனவே தொல்காப்பியக் கன்னி உரையாளர் நனனூலார் ஆதியானவர்கள் தந்த விளக்கத் தின்படி இவை (அ பிரிவு தவிர்ந்த ஏனையவை) பிறவினைப் பகுதிகள் அல்லது என்பது புரியவேண்டும். ஆட்டு ஆற்று, தீற்று ஆதியானவற்றை வடமொழி இலக்கண அமைப்பையொட்டி வீர சோழியம் பிறவினை எனக கூறியதனுல் ஏற்பட்ட திருபபம் இது என னெக்கலாம். இவ்வாருனவற்றை வடமொழியில் 'சகசனிச் சந்தம்' (இயல்பான பிறவினை விகுதி) எனப் பிரயோக விவேகம் கூறுவதும் (35) இங்குக் கருதப்படக்கூடியது' ணிச்' பிறவினை.



வடமொழியில் தனக்குப்பதம் பிறனுக்குப்பதம் என்ற கருத்துக் களைக் குறிக்கும் இரு இலக்கணக் குறியீடுகள் உண்டு. அவை முறையே ஆத்மனேபதம், பரஸ்மைபதம் என்ப.

தனக்குப்பதம் : செயற்படும் எழுவாய்க்குப் பயன்படுமாறு நிகழ்த்தப்படும் செயலைக்குறிப்பது.

பிறனுக்குப்பதம் : பிறனுக்குப் பயன்படுமாறு நிகழ்த்தப்படும் செயலைக் குறிப்பது.

இதனுற்போலும் தன்வினை பிறவினைகள் சமஸ்கிருத ஆத்மனே பதம் பரஸ்மைபதம் என்ற வினைகளையே பெரிதும் ஒப்பனவாகும் என்ற கருத்து தெரிவிக்கப்படவேண்டி நேரிட்டது. செயப்படு பொருள் குன்றியவினை, குன்ருத வினைகளை முறையே தன்வினை பிறவினை என கால்டுவெல் கருதியதனுல் ஏற்பட்ட இடர்ப்பாடும் இது எனலாம்.

தமிழ்மொழியின் இலக்கணக் கோட்பாடுகளும் சொற்களின் நிலைப்பாடுகளும் தனித்துவமானவை. தொல்காப்பியம் தெரிந்தவர் களாலும்தாம் தமிழ் இலக்கணக் கூறுகளின் தெளிந்த நிலைப் பாட்டைக் காண முடியும். தன்வினை பிறவினைகளைப் பொறுத்த வரையிலும் விதிவிலக்கு இல்லை.

## (7)

6-வது பிரிவில் தரப்பட்ட வினைகளை வாக்கியங்களில் வைத்து அவற்றின் இயல்புகளை வகைப்படுத்துவதும் கட்டுரையின் நோக் கத்தை முடித்து நிற்கும்,

1. ராஜாராம் படிக்கிருன்
2. அரவிந்தன் படிப்பிக்கிருன் (ராஜாராம் படிக்கச் செய் கிருன்)

3. மாதவன் படிப்பிப்பிக்கின்றான் (அரவிந்தன் படிப்பிக்கச் செய்கிறான்)

படிக்கிறான். தன்வினை. படிப்பிக்கிறான் இயக்குவினை. படிப்பிப்பிக்கின்றான் பிறவினை. தன்வினையில் ஒரே ஒருவினை நிகழ்ச்சி இயக்குவினையில் வெளிப்படையாக ஒன்றும் அதன் விளைவாக இன்னொன்றுமான இருவினை நிகழ்ச்சி (அரவிந்தன் படிப்பித்தல் வெளிப்படையானது. ராஜாராம் படித்தல் அதன் விளைவானது) பிறவினையில் வினை நிகழ்ச்சி இல்லை. வெறும் பணிப்புரையே. அதனாலேதான் பிறவினையை நன்னூலார் ஏவல்வினை எனக் குறிப்பிட்டார். மாதவன் அரவிந்தனைப் படிப்பிக்கச் செய்தது பணிப்புரை அல்லது ஏவலாகும்.

4 நான் உண்கின்றேன்

5. நான் ஊட்டுகிறேன்

6. நான் ஊட்டுவிக்கிறேன்

மேற்குறிப்பிட்ட இயல்புகள் இவ் வாக்கியங்களால் மேலும் தெளிவடைகின்றன. எனவே மேற்படி வினைகளைத் தன்வினை இயக்குவினை பிறவினை என வகைப்படுத்தி இலக்கணம் செய்வதே காலவளர்ச்சிக்கு ஏற்றதாகும்.

7. நான் எனக்கொரு புகலிடம் தேடிக்கொண்டேன்

8. நான் எனக்கு வீடு கட்டுவிக்கின்றேன்

தேடிக்கொண்டேன் தன்வினை, பயன் எழுவாயையே சாருகின்றது. கட்டுவிக்கின்றேன் பிறவினை, பயன் எழுவாயையே சாருகின்றது. எனவே செயல் சார்தல் அல்லது செயற்பயன் சார்தல் என்ற அடிப்படையில் தன்வினை பிறவினை வரையறை கூறுதல் பொருத்தமாக இல்லை.

எழுவாய் ஆகும் வினைமுதல் ஒரு வினையைச் செய்வது தன்வினை — வினை நிகழ்ச்சி உண்டு. இன்னொருவரைக் கொண்டு செய்விப்பது பிறவினை. செய்வித்தல் என்பதில் வினை நிகழ்ச்சி



இல்லை. வெறும் பணிப்புரையையே குறிப்பிடும். ஒரு பொருளைத் தானே இயக்குவது இயக்குவினை. இங்கே ஒன்று இயங்க மற்றொன்று அதனை இயக்குகின்றது. அதாவது இயக்குவினையில் முன் சுட்டிக்காட்டியபடி இருவினை நிகழ்ச்சிகள் உண்டு. இவ்வாறு கொள்வதே எதார்த்த நிலைக்கு ஏற்றதாகும். ஆகவே, உகரம் பிறவினை விகுதி அன்று என்பதும் இகரமே பிறவினை விகுதி என்பதும் பெறப்படும்.

மேற்கோள்

1. வேங்கடராசுலு செட்டியார் வே. 1944 தொல்காப்பிய எழுத்ததிகார ஆராய்ச்சி, சென்னைப் பல்கலைக்கழகம் வெளியீடு.

2. வரதராசன் மு. 1955 மொழிநூல். சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழக வெளியீடு, சென்னை.

3. Caldwell, Rev. 1961 Comparative Grammar of the Dravidian Languages University of Madras.

# 8. ஆய்தம் ஒரு முதலெழுத்தும் ஆகும்

ஆய்த எழுத்தின் இயல்பு எத்தன்மையானது? அஃது ஓர் அடிப்படை எழுத்தும் ஆகுமா, அன்று? இவ் வினாக்களுக்கு விடை காணுமுன், முதல் சார்பு என்ற இரு சொற்களின் பொருள் வரையறையை அறிந்திடல் அவசியம். எவ்வெப் பொருளில் இவ்விரு சொற்களும் இலக்கண நூலோரால் எடுத்தாளப்பட்டுள்ளன ?

## முதலும் சார்பும்

தொல்காப்பியனார் முதலெழுத்து, சார்பெழுத்து என ஒரு பாகுபாட்டைக் கூறினாரில்லை. சார்ந்து வருதலை மரபாகவுடைய குற்றியலுகரம், குற்றியலிகரம் ஆய்தம் என்ற மூன்றும் அல்லாத விடத்து, தமிழ் எழுத்துகள் முப்பது என (முன்னோர்) கூறுவர் (தொல். எழு. 1) என்று கூறி, அடுத்த நூற்பாவாற் சார்ந்து வரும் மூன்றும், ''எழுத்தோ ரன்ன'' எனப் புலப்படுத்தி, இவையும் சேர எழுத்துகள் முப்பத்துமூன்று எனக் கொள்ள வைத்தார். குறிப்பிட்ட மூன்றெழுத்தைச் சார்பெழுத்து என்று கூறினார் அன்றி, ஏனைய முப்பதையும் முதலெழுத்து என அவர் கூறவில்லை. இம் முப்பத்துமூன்று ஒலிகளுமே அடிப்படை ஒலிகள் என்ற காரணத்தாலேதான் அவர் அவ்வாறு கூறவில்லை. ''மூன்று தலையிட்ட முப்பதிற் றெழுத்து'' (தொல். எ. 103) எனப் பின்னும் அவர் கூறியதை நோக்கும்பொழுது இம் முப்பத்துமூன்று எழுத்துகளையும் அடிப்படை எழுத்துகளாகவே கருதினார் என்பது வலுவுறுகின்றது.

''எழுத்தோ ரன்ன'' என்பதற்கு, 'அவையும் முற்கூறிய முப்பதெழுத்தோடு ஒரு தன்மையாய் வழங்கும்' என நச்சினார்க்கினியர் உரை வரைந்திருப்பதையும் இங்கு நினைவுகூர வேண்டும். 'ஒரு தன்மையாய்' என்றதால் இம் முப்பத்துமூன்றும் அடிப்படை ஒலிகள் என்ற கருத்து நச்சினார்க்கினியருக்கும் உடம்பாடாதல் பெற்றுக்கொள்ளக் கூடியதே.



''எழுத்தோ ரன்ன'' என்ற தொடர் மீண்டும் எழுத்ததிகாரத்திலே தொல்காப்பியரால் எடுத்தாளப்பட்டுள்ளது (தொல். எ. 141) முன்பு என்ன கருத்தில் அதனைக் கொண்டுள்ளாரோ அதே கருத்திலேதான் இங்கும் ஆண்டுள்ளார். நச்சினார்க்கினியரும் முன்பு என்ன கருத்துரைத்தாரோ அதே கருத்தையே இங்கும் உரைத்தார். முப்பத்துமூன்று எழுத்துகளையுமே அடிப்படை எழுத்துகள் என இருவரும் கருதியுள்ளமை தெளிவாகின்றது.

எந்த மொழியின் இலக்கணமானாலுஞ் சரி, அவ் இலக்கணம் அடிப்படை ஒலிகளுக்கான குறியீடுகளையே நெடுங்கணக்கு ஆக முதலிற் கூறும். நமது இலக்கணம் இதற்கு விலக்கு ஆகாது.

இலக்கண நூல்களில் முதன்முதலாக 'முதல்' என்ற சொல்லைக் கையாண்டவர் நேமிநாத ஆசிரியரே ஆவர்.

> ''ஆவி அகர முதல் ஆறிரண்டாம், ஆய்தம்இடை
> மேவும், ககரமுதல் மெய்களாம் மூவாறும்
> கண்ணும் முறைமையால் காட்டியமுப் பத்தொன்றும்
> நண்ணும் முதல்வைப்புஆகும் நன்கு''. (நேமி. 1)

ஆவி பன்னிரண்டும், ஆய்தம் ஒன்றும், மெய் பதினெட்டும் ஆக 31 எழுத்துகளும் முதல் வைப்பு என்கிறார் நேமிநாதத்தார். முதல் என்ற சொல்லிற்கு விளக்கம் தராவிட்டாலும், ஆய்தத்தையும் முதல் வைப்பில் அடக்கியுள்ளார், ஆய்தம் ஒரு முதலொலி என்பது அவர் கருத்தாகின்றது.

தொல்காப்பியர் சார்பெழுத்தென்று சிலவற்றைக் குறிப்பிட்டார். முதலெழுத்து என எதையும் மொழியவில்லை. நேமிநாதத்தாரோ முதல்வைப்பு எனச் சிலவற்றைக் கூறினார்; சார்பு என எதையும் கூறினாரில்லை.

அறிந்தவரையில் இலக்கண நூலோருள் நன்னூலார்தாம், முதல் சார்பு என இருவகைப்படுத்தி, அனைத்தெழுத்தையும் இவ்விரு பிரிவிலும் முற்றாக அடக்கிக்கொண்டவர். இவ் இயல்பினது சார்பெழுத்து எனத் தொல்காப்பியர் விளக்கம் கொடுத்துவிட்ட

படியால், முதலெழுத்து என்பதற்கு விளக்கம் தருவது அவர் கடமையாய்விட்டது.

> "மொழிமுதற் காரண மாம்அணுத் திரள்ஒலி
> எழுத்துஅது முதல்சார்பு எனஇரு வகைத்து". (நன். 58)

மொழிக்கு முதற்காரணமான ஒலிதான் முதலெழுத்து எனக் கூறும் பவணந்தியார் எது முதலெழுத்து என்பதற்கு வரையறைவு செய்துவிட்டார். முதற்காரண ஒலி முதலொலி; அவ் ஒலியின் குறியீடு முதலெழுத்து. இவ்வாறான எழுத்து, முதல் சார்பு என இருவகைப்படும் என்றதால், சார்பெழுத்தும் மொழிமுதற்காரண எழுத்தாகலாம் என்பதையும் தெட்டத் தெளிவாக்கியுள்ளார்

முதல் என்ற சொல்லுக்குக் காரணம் என்ற பொருளும் உண்டு. "நோய் நாடி நோய்முதல் நாடி" (குறள் 948) என வரும் திருக்குறளில், 'முதல்' காரணம் என்ற பொருளாதல் அறியலாம்.

காரண ஒலி அல்லது மொழிமுதற் காரண ஒலி 'முதலொலி' ஆகி, அதன் குறியீடு 'முதலெழுத்து' ஆகியது. முதலொலி - Basic Sound. இனிச் சார்பு என்னும் பதத்தின் பொருளை அறிவோம். சார்ந்துவருவது சார்பு. எது எதனை ஏன் சார்தல் வேண்டும் என்ற வினவும் கூடவே எழுகின்றது. மிருதுவான அல்லது நுண்ணிய அல்லது இவ்விரு தன்மையும் கொண்ட ஒரு பொருள் தன்னிலும் வன்மை கூடிய ஒன்றுடன் தன் இயக்கத்திற்காகச் சார்ந்து கொள்வது இயல்பு. இவ்வகைத் தன்மை கொண்ட ஒலிகளிற் சில, வன்மையான ஒலிகளைச் சார்ந்து இயக்கம் உறுகின்றன. இங்கு சார்பொலி என்பது சார்பால் ஏற்படும் மாற்றொலி (allophone) அன்று, சாருகின்ற ஒலி என்பதே.

மென்மையான, முதிர்ச்சியுருத பனங் குருத்து 'சார்வு' (சார்பு>சார்வு) எனும் வழக்காறையும் இங்கு நோக்கி, சார்பெழுத்தின் தன்மையை விளங்கிக்கொள்ளலாம்.

இவ்வாறு சார்தல் காரணமாக, சாரும் ஒலியும் சாரப்படும் ஒலியும் ஒன்று எனக் கருதிவிடக்கூடாது. இது, வேறு, அது



வேறு, முல்லைக் கொழுந்தும் அது பற்றிப்படரும் கொழு கொம்பும் வேறுவேறு பொருளே. வேறுவேறு ஆயினும், காரண ஒலி என்ற அடிப்படையிலான முதலெழுத்து என்னும் பிரிவும், சார்தல் என்ற அடிப்படையிலான சார்பெழுத்து என்னும் பிரிவும் ஒன்றையொன்று விலக்கி நிற்கும் பாகுபாடுகள் அல்ல. ஒரு சார்பெழுத்து ஒரு முதலெழுத்து ஆகவும் அமையலாம். இவ்விருவகை ஒலிகளும் மொழிக்கு அடிப்படை ஒலிகளே.

**ஆய்தம் :**

ஆய்தம் சார்பெழுத்துகளில் ஒன்று. வரிவடிவம் ஃ ஆகும். இஃது H என்னும் ஆங்கில எழுத்தின் ஒலிப்பை ஒத்தது. H என்னும் எழுத்தின் பெயரும் அதன் ஒலிப்பும் வேறு வேருதல் போல, ஆய்தம் என்னும் பெயரும் அதன் ஒலிப்பும் உள்ளன. ஒலியை உள்ளடக்கிய சொல்லாக "அஃகேனம்" எனவும்படும். இவ் ஒலி வடமொழி விஸர்க்கம் போன்றதும் எனலாம். ஆய்த எழுத்து செய்யுளிலே மாத்திரம் பயில்வது எனவும், சமஸ்கிருத விஸர்க்கத்தின் பின்பற்றலாய் இருக்கலாம் எனவும் ஜி. யூ. போப் கூறுவர்.[1] தனிநிலை, புள்ளி, ஒன்று எனவும் வேறு பெயர்கள் இதற்கு உண்டு.

ஆய்த எழுத்தின் அதிகமான தன்மைகளை உள்ளடக்கிய சொல்லாகத் தனிநிலை என்னும் பெயர் காணப்படுகின்றது. நெடுங்கணக்கில் உயிருக்கும் மெய்க்கும் நடுவாக ஆய்தம் வைக்கப்பட்டுள்ளது. உயிரொலிகள் போல் மொழியிடையே வரும் வல்லெழுத்தை உரசொலி ஆக்குகின்றது ; யாப்பில் அலகும் பெறுகின்றது

மெய்யெழுத்துகள் போல் தனித்தியங்கும் இயல்பு அற்றது ; அளபெடை கொள்வது ; ஒலிமயக்க வரையறையை உடையது. மெய்யெழுத்துப்போல் முதலொலியாகவும் உள்ளது. இதனாற் போலும் ஆய்தம், உயிர் மெய் இரண்டின் 'புணரொலி' எனவும் கூறப்படும்.

சில எழுத்துகள் எடுத்து உச்சரிக்கப்படுவன. சில படுத்து உச்சரிக்கப்படுகின்றன. ஆய்தம் எடுத்தும் படுத்தும் உச்சரிக்கப்படு

வது. எந்த நோக்கிலும் தனிநிலை என்ற பெயர் மிகப் பொருத்த மானதே.

இன்னும் ஒரு தனிநிலை அதற்கு உண்டு. ஆய்தம் என்ற பெயரே அதைக் காட்டும்.

'ஓய்தல் ஆய்தல் நிழத்தல் சாஅய்
ஆவயின் நான்கும் உள்ளதன் நுணுக்கம்'
(தொல். சொ. 330)

ஒரு குறிப்பிட்ட நான்கு சொல்லும் 'ஒரு பொருட்குள்ள அளவின் நுணுக்கத்தைக் காட்டும்' என்பர் தெய்வச்சிலையார்.[2] எனவே, ஆய்தம் இயல்பிலேயே நுணுகிய ஒலி என்பதாம். அன்றி, நுணுக்கப் பட்ட ஒலி ஆகாது. ஆய்தம் மிகமிக நுண்ணிய ஒலி என்றே கால்டுவெல் அவர்களும் கூறுவர்.[3]

**நலிபும் நலிப்பும் :**

ஆய்தம் நலிபு எனவும்படும். ஆய்தவண்ணத்தை நலிபு வண்ணம் எனக் கூறுவர் தொல்காப்பியர். 'நலிபுவண்ணம் ஆய்தம் பயிலும்' (தொல். பொ. 535). இந்நூற்பா உரையில் 'நலியென்பது ஆய்தம்' எனக் குறிப்பிடுவர் நச்சினார்க்கினியர். 'நலிந்து உச்சரிக்கப் படுதலின் நலிபு எனப்பட்டது' என இதன் காரணம் தெரித்தார்[4] குமாரசுவாமிப் புலவர். இவ்வாறு உச்சரிப்பதனை வடநூலார் 'ஸ்வரிதம்' என்று கூறி, 'சமாகாரஸ்வரித' என, அதன் இலக்கணத்தையும் கூறியுள்ளனர்.

ஆய்தத் தொடர்மொழி இறுதிவல்லினம் உரசொலியாக நலிவதால், ஆய்தம் நலிபு எனப்பட்டது என்றொரு கருத்தும் உண்டு.[5] அதுவாயின், ஆய்தம் 'நலிப்பு' எனப்பட்டிருத்தல் வேண்டும். எனவே, தெய்வச் சிலையார் கருத்தே 'உள்ளதன் நுணுக்கம்' என்பதற்குச் சரியான பொருளாகும். இயல்பிலேயே நுணுகிய ஒலி உடைய ஆய்தம் நலிபு எனப்பட்டது என்க.

**இயல்பான தனியொலி :**

ஆய்தம் இயல்பான ஒரு தனி ஒலியே ஆகும். இன்னொன்றின் திரிபொலி எனின் தொல்காப்பியனார் நிச்சயமாகக் கூறியிருப்பார்.



அவர் எங்கும் அதனைத் 'திரிபொலி' என்று கூறவில்லை. வேறு எந்த இலக்கண நூலாசிரியராவது ஆய்தத்தைத் திரிபொலி என்று கூறவும் இல்லை. தொல்காப்பிய எழுத்ததிகாரத்திற்கு நுட்பமான உரைதந்த நச்சினார்க்கினியர் கூட, ஆய்தம் இயல்பானதோர் ஒலியே என்றார். எழுத்ததிகாரம் இரண்டாம் நூற்பா உரையில் ஆய்த ஒலிபற்றி அவர் குறிப்பிடுவது பின்வருவதாகும்.

''இதற்கு வடிவு கூறினார், ஏனையொற்றுகள் போல உயிரேறாது ஓசை விகாரமாய் நிற்பதொன்றாகலின். எழுத்தியல் தழா ஓசைகள்போலக் (கொள்ளினுங் ?) கொள்ளற்க என்றற்கு எழுத்தேயாம் என்றார்.''

குற்றியலுகர இகரங்களுக்கு வேறாக வடிவில்லை. 'சந்தனக் கோல் குறுகினால் பிரப்பங்கோலாகாது. அதுபோல் உயிரது குறுக்கமும் உயிரேயாம்' என அறுதியிட்டுக் கூறியவருக்கு, இறுதியான சார்பெழுத்திற்கு (ஆய்தம்) எனத் தனி ஒலி உண்டா, அவ் ஒலிக்கெனத் தனி வடிவம் உண்டா என எழும் வினாக்களுக்கு விடை கூறும் கட்டாயம் ஏற்பட்டுவிட்டது. ஆதலினாலேதான், 'இதற்கு வடிவு கூறினார்... ஓசை விகாரமாய் நிற்பதொன்றாகலின்', என்றார். ஏனை மெய்கள் போல் உயிரேறாத ஆய்தத்திற்கும் வடிவுண்டா எனில் உண்டு. அவ் ஓசை, ஏனை மெய்களின் ஓசை நோக்க விகாரமானது. இதுவே நச்சினார்க்கினியர் கருத்தென்க. தனி வடிவு உண்டு என்பதற்குக் காரணம் தனி ஒலியும் உண்டு என்பதாகும்.

ஓசை விகாரம் எழுவாய்த் தொடர் : ஓசையினது விகாரம் என்ற கருத்திலான ஆறும் வேற்றுமைத் தொகைத் தொடர் அன்று. மனித முகம் நோக்க மந்திமுகம் விகார முகம் என்று கூறப்பட்டுள்ள முதிய இலக்கண உவமையை இங்கும் நினைவு கூரலாம். ஆய்த ஒலி ஆய்தத்திற்கு இயல்பொலி ; ஏனை ஒலிகளுடன் ஒப்புநோக்க ஓசை விகாரம் என்பது கருத்து.

மேலும், ஓசையினது விகாரமாய் நிற்றல் வடிவு கூறுதற்குக் காரணம் ஆக முடியாது. ஓசை விகாரங்களுக்குத்தான் வடிவுண்டு என்றாய்விடும் அல்லவா ! திரிபொலி அன்று என்பதுடன் அவர்

நின்றுவிடவில்லை. இயல்பான சீழ்க்கை, முக்கு, முனகல் ஒலிகள் போலவும் கொள்ளற்க என்றும் கூறியுள்ளாரே!

மீண்டும் நாம் தொல்காப்பியத்திற்கு வருவோம். ''ஈறியல் மருங்கினும் இசைமை தோன்றும்'' (தொல். எ. 39) என்ற நூற்பாவில் 'இசைமை' என்ற சொல் ஆய்தத்திற்கெனத் தனி ஒலி உண்டு என்பதைத் தெட்டத் தெளிவாகக் காட்டுகின்றது. இவ்வண்ணம் ஒலியியல் வல்லுநரான தொல்காப்பியர் கூறியிருப்பவும், அதனைத் திரிபொலி என்று நாம் ஏன் ஒரு கற்பனையில் இறங்கவேண்டும்?

முஃடீது, கஃறீது எனவரும் தொடர்மொழிகளின் இறுதி எழுத்துக்களான ளகர லகரங்கள் புணர்ச்சிக்குரிய இயல்புகளின்படி கெட்டுவிட, அவ் வெற்றிடங்களை ஆய்தம் நிரப்பிக்கொண்டது. நிலைமொழி இறுதிகள் கெட, ஆய்தம் தோன்றியது என்றே கூறுவர்[6] நேமிநாத உரையாசிரியரும். ஆங்கில மொழி மேதையும், உலகு வியக்கும் பேரறிஞருமாகிய சேர் பொன். இராமநாதன் தமது செந்தமிழ் இலக்கணத்தில் மேற்கூறியவாறே முடித்துக் காட்டியமையும்[7] தெரிக. ஏன், ''லளவீற் றியைபின்ஆம் ஆய்தம் அஃகும்'' (நன். 97) எனவே கூறினார் பவணந்தியாரும். ''ஆகும் ஆய்தம்'' என்றாரல்லாமல், திரியும் ஆய்தம் எனக் கூறவில்லை.

அவ் கடிய என்பது கடைக்குறையாய் அஃ கடிய எனவாயிற்று எனல் வேண்டும். அல்லாக்கால், ஆண்டு ஆய்தம் தோன்றற்குக் காரணம் இன்றாம் எனக் கூறுவர்[8] கார்த்திகேய முதலியாரும்.

ஒரு தன்மைகெட்டு மறுதன்மை உண்டாவதையே திரிபு என்று சொல்வது. புத்தருடைய கணபங்கவாதத்தை இவ்விடத்து நினைவு கூருவோம். இவ்வழி நோக்க முஃடீது, கஃறீது என்பவற்றில் லகர ளகரங்கள கெட, ஆய்தம் தோன்றியதே திரிபு ஆகும். அப்படித் தோன்றும்போது, பிறப்பாலும் முயற்சியாலும் ஒத்தனவே தோன்றும் அது வேறு காரியம்; இந்த முறையில் திரிவதை வைத்துக்கொண்டு ஆய்தம் திரிபொலி என்பதா?

திரிபொலி எனவே கொள்வோம். மட்பாண்டம், விட்புலம் என்னும் தொடர்களில், ணகர ளகரம் டகரமாகத் திரிந்தன. டகரம்



அடிப்படை ஒலியன்று எனக் கொள்ளுவமோ? இவ் வண்ணமே குறிப்பிட்ட சில எழுத்துகள் ஆய்தமாகத் திரிவதால் அஃது இயல்பொலியும் அன்று, அடிப்படை ஒலியும் அன்று எனக் கொள்ள முடியாது. ஆய்தம் ஓர் இயல்பான அடிப்படை ஒலி என்பதாலே தான் தமிழ் நெடுங்கணக்கில் ஓரெழுத்தாக இடம்பெற்றது.

ஆய்தம் இயல்பான அடிப்படை ஒலி என்ற காரணத்தினாலே தான் நன்னூலாரும் அதற்குத் தனியாகப் பிறப்பிடம் கூறினார்; ''ஆய்தக் கிடந்தலை'' (நன். 87) என்றார்.

ஏனம் என்றொரு சாரியை கொடுத்து, அஃகேனம் எனக் கூறும் வழக்கமும் ஆய்தம் ஓர் இயல்பொலி என்பதற்கு ஆதாரமாகும். அஃ+க்+ஏனம். ககரம் எழுத்துப்பேறு.

மெய்யெழுத்துகளை ஒலிக்க, மெய்யொலி அனைத்தின் முன்னம் இகரம் ஒலிப்பதையும், வல்லினத்தை உச்சரிக்க இறுதியில் உகரம் ஒலிப்பதையும் கவனிக்கலாம். ஆய்தம் அரையுயிரும் அரை மெய்யுமான ஓரெழுத்தென்பர் கால்டுவெல். அதனாற்போலும் ஆய்தத்தை அஃ, இஃ என இரண்டாயும் மக்கள் உச்சரிப்பர். இஃ என்பதில் இகரம் இடும்பை, இழுப்பு என்பவற்றிலுள்ள இகரம்போல் ஒலிக்கும். ஆய்தத்தை உயிர்மெய் இரண்டின் புணரொலி எனவும் கூறுவதுண்டு.[9]

இன்னும், சாரியை பெற்று அஃகான், மஃகான் என வரும் இடங்களில் நிற்கும் ஆய்தத்தை எதன் திரிபென்பது?

லகர, ளகரங்களின் திரிபொலிதான் ஆய்தம் என்று கொண்டவர், ஆய்தம் வரும் இடங்களிலெல்லாம் அவ் ஆய்தம் ஏதோ ஒரெழுத்தின் திரிபு எனக் காட்டுவதற்கு முயன்றுள்ளனர். அஃது என்னும் ஒரு சொல் அவ் து எனப் பிரிக்கப்பட்டு, வகரத்தின் திரிபு ஆய்தம் எனப்படுகின்றது. அவ் என்பது ஒரு பன்மைச் சொல். தொல்காப்பியனார் கூறிய 'வற்று' என்னும் ஒரு சாரியையை 'அற்று' எனக் கொண்டுள்ளார் நன்னூலார். இதிலிருந்து தெரிவது அவ் என்பதை நன்னூலார் பன்மையாகக் கண்டுள்ளார் என்பதே. அவ் என்ற பன்மையுடன் து என்ற ஒருமை விகுதி சேர்ந்து முழுவதும் ஒருமைச் சொல்லாகும் முறை

மொழி இயல்புக்கு ஒவ்வாததாகும். மூன்றெழுத்துச் சொற்களிடை வரும் ஆய்தத்தை இயற்கையாக வருவது எனக் கூறுவர்[10] பேராசிரியர் இலக்குவனரும்.

இதுவரை கூறப்பட்டவற்றிலிருந்து ஆய்தம் திரிபொலி அன்று என்பதும், அஃதோர் இயல்பான தனி ஒலி என்பதும் பெற்றுக் கொள்ள முடியும்.

அகம் — மனை, மனம்
அஃகம் — தானியம்

**அடிப்படை அல்லது முதலொலி**

அகரம் — அ என்னும் எழுத்து
அஃகரம் — வெள்ளெருக்கு
அகல் — விசாலித்தல்
அஃகல் — சிறிதாகல்

இச் சோடுகளில் ஒவ்வொன்றும் பொருள் வேறுபாடுள்ளது. காரணம் ஒவ்வோர் இணையிலும் ஒவ்வொன்று ஆய்த எழுத்தைக் கொண்டிருப்பதாகும். எனவே, ஆய்த எழுத்தை அடிப்படை எழுத்து அல்லது முதலெழுத்து அல்லது ஒலியன் எனக் கொள்ள வேண்டியுள்ளது.

இவ்விடத்து நம் மூதாதையரின் பெயர் வைக்கும் திறனையும் வியந்து பாராட்டாமலிருக்க முடியாது. அஃகு என்பது ஒரு வினைப்பகுதி. வினைப்பகுதிகளை இருபத்துமூன்றாக வகுத்த நன்னூலார் குற்றுகர வினைப்பகுதிக்கு 'அஃகு' என்பதனையே கொண்டார். இதன் அடிச்சொல் 'அஃ' என்பதாகும். சுருங்கிய நுண்ணிய ஒலி யொன்றுலேயே சுருங்குதல், நுணுகுதல் என்று பொருள்படும் ஒரு சொல் ஆக்கப்பட்டுள்ளது. இசை காரணமாகத் தோன்றும் உரிச் சொற்களுள் இஃதும் அடங்கும்.

அது, அஃது; இது, இஃது; உது, உஃது ஆகிய சுட்டிணைகளிற் பொருள் வேறுபாடில்லை. ஆனால், ஒரு காரணம்பற்றித்



தான் ஆய்தம் இடையே புகுந்துகொண்டது; அது + ஆடை ஆகிய இரு மொழிகளையும் புணர்க்க, 'அதுவாடை' எனப் புணரும். இதனாற் பல பொருள்தரும் தொடராக அஃது மாறிவிட்டது. அது வாடை என, சோளகமன்று, அது வாடைக்காற்று என்றொரு பொருளும் கொள்ளலாம். அது > அஃது என நிறுத்தி, ஆடையுடன் சேர்க்க 'அஃதாடை' எனச் சேரும். இரண்டாவது பொருளொன்று தோன்றவில்லை. பொருள் மயக்கைத் தவிர்த்திடற்காக, கால்டு வெல் கருதுவதுபோல், இவ்விடங்களில் ஆய்தம் இலக்கண நூலோரின் புலமை நெறியிலான படைப்பு[11] ஆகலாம்.

ஆய்தத்தை ஒரு முதலெழுத்தாகக் கொள்ளக் கூடாதென்பதற்கு, ஆய்தம் மாற்றொலிகளை ஏற்படுத்துவது ஒரு காரணமாகக் கூறப்படுகின்றது.[12] ஆய்தம் மாத்திரம் மாற்றொலியை உண்டாக்கவில்லை. முதலெழுத்து எனக் கூறப்படும் ஏனையெழுத்துகளிற் சிலவும் மொழி இடையில் நிற்கும் வல்லினத்திற்கு மாற்றொலி உண்டாக்குகின்றன. மகாமேதை, அல்கு, சுளகு என்பவற்றிலுள்ள வல்லினம் உரசொலியாகவே மாறுகின்றது. ஆகவே, இக்காரணம் காரணமாகாமை அறியலாம்.

இறுதியாகப் புலவர் புராணம் உடையாரின் ஒரு செய்யுளைக் குறிப்பிடுவது பொருத்தமாகத் தெரிகிறது.

''ஆயுத வெழுத்தொன் றென்ற தவர்களு மையு மௌவும்
தோயுமாத் திரையி ரண்டாச் சொல்பவர் களும்போன் றுள்ள
பேயுணர் வினரெல் லோரும் பெரும்புகழ்க் கும்ப நாதன்
ஆயுமுன் றமிழ்ச்சீ ரோர்ந்து நவின்றமை வினவி லாரே,''

'ஆயுதவெழுத்தொன்றென்றதவர்களும்' என்பதற்கு இந் நூலாசிரியரின் மகனராகிய தி. மு. செந்தில்நாயகம் பிள்ளை அவர்கள், 'ஆய்தவெழுத்தைச் சார்பாகக் கொள்வது விடுத்துத் தனித்த சுதந்திர எழுத்தாகக் கொள்ளாதோரும்' எனக் குறிப்புரை எழுதியுள்ளார். இக் குறிப்புரையையும் குறிப்பாகக் கவனிப்போம்.

சார்பெழுத்தும் முதலெழுத்தும் ஒன்றுக்கொன்று முரணான தன்மையைக் கொண்டவை அல்ல என்பதும், ஆய்தம் திரிபொலி அன்று, இயல்பான தனி ஒலி என்பதும், அஃதோர் அடிப்படை

ஒலி என்பதும் இக் கட்டுரை மூலம் பெற்றுக்கொள்ளக் கூடியனவாம்.

அடிக்குறிப்புகள் :

1. Pope. *G. U.*; *A Hand Book of the Ordinary Dialect of the Tamil Language*; p. 12; Oxford University Press, London, 1911.

2. தெய்வச்சிலையார்: தொல். சொல்; பக். 171; தெ. இ. சை. நூ. கழகம், 1963.

3. Caldwell Rt. Rev.; *A Comparative Grammar of the Dravidian Languages or South Indian family of Languages*; P. 130. University of Madras, 1961.

4. குமாரசுவாமிப்புலவர் அ.: யாப்பருங்கலக்காரிகை—பக். 213; கு. அம்பலவாணபிள்ளையால் பதிப்பிக்கப்பட்டது 1938.

5. தெ. பொ. மீ.; கலைக்களஞ்சியம் (தொகுதி—2); பக். 758; தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை; 1955.

6. நேமிநாதம்; பக். 30; தி. தெ. சை. நூ. கழகம், சென்னை; 1956.

7. இராமநாதன் கௌரவ ஸ்ரீமான் பொன்னம்பலம்; செந்தமிழ் இலக்கணம் முதற்பாகம்; பக். 70; அடிசன் அச்சுக்கூடம், சென்னை; 1927.

8. கார்த்திகேய முதலியார், மாகறல்: மொழிநூல்; பக். 17. (இலக்கணவியல்); வேப்பேரி, சென்னை; 1913.

9. தியாகராயன் ஈப்போ திரு.: செந்தமிழ்ச் செல்வி பதினொன்றும் சிலம்பு; பக். 161; தி. தெ. சை. நூ. கழகம்; 1933.

10. இலக்குவனார் சி.: தொல்காப்பிய ஆராய்ச்சி; பக். 62 வள்ளுவர் பதிப்பகம், புதுக்கோட்டை; 1961.

11. மூன்றும் அடிக்குறிப்புப் பார்க்க.

12. வேலுப்பிள்ளை ஆ.: தமிழ் வரலாற்று இலக்கணம்; பக். 56 பாரிநிலையம், சென்னை; 1966.

———

